இதுவரை நீங்கள் அறிந்திராத பல ரகசியங்களை
இந்த புத்தகத்தின் மூலம் தெரிந்துக் கொள்ளலாம்

# நீங்கள் நினைத்ததை அடைந்தே தீர சக்தி வாய்ந்த மந்திர சாவி இதோ!!!

பிரபு ஏகாம்பரம்

# நீங்கள்
# நினைத்தை
# அடைந்தே தீர
# சக்தி வாய்ந்த
# மந்திர சாவி
# இதோ!!!

பிரபு ஏகாம்பரம்



# CONTENTS

அற்புதமான வீட்டை வெற்றிக்கரமாகக் காட்சிப்படுத்தும் முறை

நீங்கள் அதை அடைந்தே தீர வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு எதையெல்லாம் தரும்

உங்களது வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த கச்சிதமான வழி

# இப்புத்தகத்திலிருந்து எதையெல்லாம் பெற போகிறீர்கள்:

முன்னுரை - இப்புத்தகத்தில் கூறியுள்ள அனைத்து பயிற்சிளுக்கும் இந்த விதிமுறைகளை கடைபிடியுங்கள்

1. பிரபஞ்ச ரகசியம்
2. நீங்கள் எதை கேட்டாலும் தரும் மிகப்பெரும் புதையற்க்களஞ்சியம்
3. உங்களுடைய ஆசைகளை அடைவதற்கான வழிகள் அனைத்தும் இங்கு தான் உள்ளது
4. நீங்கள் எதைப் பற்றி ஆழமாக யோசிக்கிறீர்களோ அதுதான் உங்களுடைய நிஜமான உலகம்
5. நீங்கள் கேட்பதை வேகமாக பெற ரகசியம்
6. எண்ணங்களுக்கு சக்தி ஊட்டுவது எப்படி
7. மூளையின் செயல் திறனை சிறப்பாகப் பயன்படுத்துவது எப்படி
8. குறிக்கோள்களுக்கு ஏற்ற பதில் கிடைக்கும் நேரம்
9. சக்தி மிகுந்த மூளையயை பயன்படுத்துங்கள்
10. தியானம் செய்தால் உருவாகும் அற்புத சக்தி
11. இதை செய்தால் நடக்கும் எல்லையில்லாத பலன்கள்
12. நேரத்தை நிறைய பயன்படுத்துவது எப்படி?
13. எல்லையற்ற பேரறிவின் வளங்களை இதை செய்தால் அள்ளிக் கொள்ளலாம்
14. மிகவும் உருக்கமாக உங்கள் கடவுளிடம் உரையாடுங்கள் வேண்டியது கிடைக்கும்
15. உணர்வுப்பூர்வமாக செயல்படுத்துங்கள்
16. பயிற்சியின் போது செய்யக்கூடிய முக்கியமான விஷயங்கள்

40. பணம் பெரும் சக்திவாய்ந்த ஆழ்மன செயல்முறை
41. பிரபஞ்சத்தை பற்றிய இந்த கருத்தில் உங்களுக்கு ஓர் புரிதல் ஏற்படவேண்டும்
42. அருமையான வாழ்க்கைக்கு எற்ற சுயக்கட்ட ளைகள்
43. ஆழ்மனம் வேறு, நாம் ஏற்றுக் கொள்ளும் எண்ணங் கள் வேறு
44. உண்மையில் ஆழ்மனத்திலும், பிரபஞ்சத்திலும் என் னதான் நிகழ்கிறது
45. சில நாட்களில் உச்சகட்ட வெற்றியை அடைய வழிகள்
46. சக்திவாய்ந்த மனப்பிம்பத்தால் நமக்குள் என்ன நிகழ்கின்றது
47. நாம் வாழ்ந்துகொண்டிருக்கும் காந்தம்
48. ஒரே மாதத்தில் வேண்டிய பணத்தை பெறுவது எப் படி?
49. நிறைய பணத்தை பெறுவதற்கான ராஜதந்திரம்
50. உயரிய மனிதனாக மாறுவதற்கு என்ன செய்ய வேண் டும்?
51. ஆழ்மனதில் பதிய வைத்துவிட்டால் நிகழும் அற்புதம்
52. ஆழ்மனதில் பதிய வைக்கும் முறை
53. அற்புதமான வீட்டை வெற்றிக்கரமாகக் காட்சிப்படுத் தும் முறை
54. ஆழ்மனதோடு ஆழமான நட்பு வைத்துக் கொள் ளுங்கள்
55. நீங்கள் அதை அடைந்தே தீர வேண்டும் என்ற எண் ணம் உங்களுக்கு எதையெல்லாம் தரும்
56. ஆழ்மனதை அடைவது வேறு வழி
57. நீங்கள் வெற்றி இன்றே கடைசி
58. உணர்வைத் தூண்டும் கேள்விகள்
59. உங்களுடைய எதிர்மறை பழக்கத்தை மாற்றுங்கள் வெற்றியை குவியங்கள்
60. அளவில்லாத பேராற்றலைப் பயன்படுத்தும் முறை

61. உங்களுடைய தனித்துவமான வாழ்க்கையை வாழுங்கள்
62. சக்தி தளத்தின் இடம்
63. மிகத்துல்லியமான கச்சிதமான நிலையை கொண்ட இயற்கை
64. பயத்திற்கே பயம் காட்டுவது எப்படி
65. நீங்கள் எதிர்பார்த்த முன்னேற்றம் நடக்கவில்லை, ஒரே விரக்தியாக செல்வது போல் தோன்றுகிறதா?
66. உங்களது வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை ஏற்ப டுத்த கச்சிதமான வழி
67. துனைவர் கிடைப்பதற்கான பயிற்சி
68. உங்கள் வாழ்க்கையை மாற்ற போகும் சக்தி வாய்ந்த பயிற்சி

# முன்னுரை

------------------------------



ப்புத்தகத்தில் கூறியுள்ள அனைத்து பயிற்சிகளுக்கும் இந்த விதிமுறைகளை கடைபிடியுங்கள்.

- ❖ 48 நாட்கள் உங்கள் மொத்த எண்ணங்களும், திட்டங்களும், செயல்பாடுகளும் வளர்ச்சியில் தான் இருக்க வேண்டும்.
- ❖ குதிரைக்கு கடிவாளம் கட்டியது போல அதில் மட்டுமே கவனம் வைக்க வேண்டும்
- ❖ ஒரு நாளைக்கு குறைந்தது இரண்டு முறையாவது இந்த பயிற்சியை செய்ய வேண்டும்.
- ❖ இது எப்போது கிடைக்கும் என ஆராய்ச்சி செய்யாமல் பயிற்சியை மட்டும் மேற்கொள்ளுங்கள்.
- ❖ நேர்மறை எண்ணங்ளுக்கு மட்டுமே இங்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்.
- ❖ நீங்கள் இந்த பயிற்சியை மேற்கொள்வது உங்களை தவிர வேறு யாருக்கும் தெரியப்படுத்தாதீர்கள், ஏனெனில் அவர்களின் எண்ணங்கள் உங்களை அதிக அளவில் பாதிக்கும்.
- ❖ ஒவ்வொரு நாளும் நீங்கள் மேற்கொள்ளும் பயிற்சிகள் அனைத்தும் உங்களுக்கு வெற்றிகரமான பழக்கத்தை ஏற்படுத்தும் அதுமட்டுமல்லாமல் இது உங்கள் வாழ்க்கையில் வேகமாக நடப்பதை உணர்வீர்கள்.

- நீங்கள் பயிற்சி செய்துவிட்டு நம்பினாலும் சரி நம்பா விட்டாலும் சரி அது நிச்சயமாக நடந்துவிடும்.
- நீங்கள் செய்யும் ஒவ்வொரு நாள் பயிற்சியும் ஒவ்வொரு பெரும் கற்களை அடுக்கி ஒரு பெரிய கோட்டை கட்டுவதற்கு சமம் என்பதை மனதில் பதித்துக் கொள்ள வேண்டும்.
- இவை அனைத்தும் உங்கள் நிஜ வாழ்க்கையில் அனுபவமாக மாறும் என அனைத்து சாதனையா ளர்களும், வெற்றி பெற்ற மனிதர்களும் பல ஆயிரம் வருடங்களாகக் கூறி வருகின்றனர் என்பதை தெரிந்து கொள்ள வேண்டும்.
- எப்போதும் நம் சமுதாயத்தில் ஒரு சிறப்பான வளர்ச்சியை அடைவதற்கான வழி இருக்கின்றது, அது தான் நிறைய மக்களுக்கு பெரும் வெற்றிகளை உருவாக்கியுள்ளது என உணர வேண்டும்.
- இதை நீங்கள் எந்த சந்தேகமும் இல்லாமல் அதிகப்படியான நம்பிக்கை உணர்வோடு வாழ வேண்டும், ஏனெனில் இதற்கு பிரம்மாண்டமான சக்தி பெற்றது.
- ஆழ்மனதின் செயல்பாடு தான் உங்களது மொத்த உடம்பின் செயல்களை கண்காணிக்கிறது, இதை நீங்கள் உண்மையாக உணர்ந்து யோசித்து பார்க்க வேண்டும்.
- இந்த விதிமுறைகளோடு பயிற்சிகளை செயல்ப டுத்தினால் நிச்சயமான பலன் கிடைத்தே தீரும்.
- இந்த பயிற்சியினை செய்தே ஆக வேண்டும், இதை தவிர வேறு வழியே இல்லை என்பது போல நடந்து செயல்படுத்துங்கள் வெற்றி பெறுவீர்கள்.

## பிரபஞ்ச ரகசியம்:

- பிரபஞ்சம் மிக பிரம்மாண்டமாக பரந்து விரிந்துள் ளது. அதில் நம் சூரிய குடும்பம் போல் லட்சக்க ணக்கான குடும்பங்கள் பிரபஞ்சத்தினுள் உள்ளன. அந்த அனைத்து கிரங்களையும், அதன் குடும்பங் களையும் கட்டுப்படுத்தி இயக்குவது பிரபஞ்ச சக்தி தான்.

- பிரபஞ்சத்தில் பூமி ஒரு சிறுத்துளி. அதோடு பூமியில் நாம் இன்னும் ஒரு மிக மிக சிறு துளிகள். ஆனால் நாம் இந்த பிரபஞ்ச சக்தியை வைத்து அனைத்தையும் நம் கட்டுப்பாட்டில் கொண்டு வரலாம்.

- பிரபஞ்ச சக்திக்கும் நம் ஆழ்மனதிற்கும் ஒரு தொடர்பு உள்ளது. இந்த இரு சக்திகளும் அளவிட முடியாத மிக பெரும் புதையற் களஞ்சியம். இவற் றிடம் நீங்கள் எதை கேட்டாலும் தரும். ஏனெனில் அவை கணக்கிலடங்காத விஷயங்களையும், அரிய கண்டுபிடிப்புகளையும் உள்ளடக்கியுள்ளது. அதன் மூலம் உங்களுக்கு தேவையான பிரம்மாண்டமான படைப்பை அதனிடமிருந்து பெற்று கொள்ளலாம்.

## நீங்கள் எதை கேட்டாலும் தரும் மிக பெரும் புதையற் களஞ்சியம்:

*பிரபஞ்சத்திடம் நாம் கேட்டதை பெற வேண்டு மென்றால் ஒரு செயலை திரும்ப திரும்ப ஒரு பழக்கத்தை போல செய்ய வேண்டும்.*

1. எல்லோருக்கும் என் மேல் எக்கச்சக்கமான மதிப்பும், மரியாதையும் இருக்கிறது.

2. நிறைய பணம் என்னிடம் சேர்ந்து கொண்டே இருக்கிறது.

3. வற்றாத செல்வத்தை நான் என்னிடம் வரவேற் கிறேன்.

எந்த அளவுக்கு நம்மால் மகிழ்ச்சியாகவும், நிம் மதியாகவும், இருக்க முடியுமோ அந்த அளவுக்கு மிக பெரும் பணக்காரராகவும் இருக்க முடியும் அனைத் தும் எண்ணம் போல் தான். தமிழ்நாட்டிலும் சரி, ஏன் இந்தியாவிலும் சரி, நிறைய பேரிடம் கோடிக்கணக்கில் பணம் புரளுகிறது. மனமும், தோட்டமும் ஒரே மாதிரி யான செயல்களையும், விளைவுகளையும் தரக்கூடியது. கீழுள்ள எண்ணங்களில் நம்பிக்கை வையுங்கள்.

- ❖ பிரபஞ்ச சக்தியால் முடியாது என்பதே இல்லை.
- ❖ பிரபஞ்சமும் நானும் கூட ஒன்று தான், மிகபெரும் செல்வசெழிப்பு என்னுடையதே!!

❖ உணர்வுபூர்வமாகவும், தெளிவாகவும், முழுமையாக, தொடர்ந்து, மனதில் பதிய வைக்கும் காட்சி நிச்சயம் வந்தே தீரும்.

## உங்களுடைய ஆசைகளை அடைவதற்கான வழிகள் அனைத்தும் இங்கு தான் உள்ளது!!!

ஒவ்வொரு மனிதனும் தங்களுடைய ஆழமான ஆசைகளை அடைய எப்போதும் தவித்துக் கொண்டு தான் இருக்கின்றான். ஏனென்றால் அதை அடைவதற்கான வழிகள் தெரியாதது தான் அதற்கு காரணம். உங்களுடைய ஆசைகளை அடைவதற்கான வழிகளை நீங்கள் தெரிந்து கொண்டால் அதிஷ்ட தேவதை உங்களிடமிருந்துக் கொண்டு எப்போதும் உங்களுக்கு தேவையான அனைத்தையும் கொடுத்துக்கொண்டும், வாரி வழங்கிக்கொண்டும் இருப்பாள்.

ஏனென்றால் நீங்கள் அடைய வேண்டும் என்று நினைக்கும் பொருளை ஏற்கனவே பலர் அடைந்துள்ளனர். இதை லட்சக்கணக்கானோர் அடைந்துள்ளனர் என்றால் அதை அடைவதற்கான லட்சக்கணக்கான வழிகள் உள்ளது என்பதுதான் உண்மை.

அதனால் உங்களுக்கு தேவையான அனைத்து பொருட்களுக்குமான விடை இங்குதான் உள்ளது என்பதனை அறிய வேண்டும்.

அதை இதிலிருக்கும் ஆழ்மன ரகசியம் மூலம் அடையலாம்.

நீங்கள் எதைப் பற்றி ஆழமாக யோசிக்கிறீர்களோ அதுதான் உங்களுடைய நிஜமான உலகம்:

நீங்கள் எதைப்பற்றி ஆழமாக யோசிக்கிறீர்களோ அதை மட்டுமே முடிவில்லா பேரறிவு உங்களிடம் கொடுக்கின்றது. அதைத்தான் இப்படி புரிந்து கொள்ள வேண்டும் எண்ணங்களுக்கு ஏற்றாற்போல விளைவுகளை தருகின்றது.

அதாவது அன்பு, பேரானந்தம், காதல், எல்லையற்ற மகிழ்ச்சி, பணம், உயர்வு, நம்பிக்கை, உற்சாகம், எப்போதும் நிம்மதி ஆகிய இந்த விதமான சிந்தனைகளை மட்டும் மனது அசைபோட்டுக் கொண்டே இருந்தால் அது நம்முடைய வாழ்வில் நடக்கக்கூடும் என்பது தான் மறுக்கவே முடியாத உண்மை.

இதில் உங்களுக்கு எது தேவையோ அது உங்களிடம் அதிகமாக உள்ளது போன்றதோர் சிந்தனையை உருவாக்க வேண்டும். கண்களுக்குப் புலப்படாத இந்த உணர்ச்சிகளுக்கு தான் எல்லையில்லாத சக்திகள் உள்ளது என்று நினைவில் வைத்திருந்தால் அற்புதங்கள் நிகழும்.

இதில் இன்னொரு முக்கியமான விஷயம் உங்களுடைய அழுத்தமான, தீவிரமான ஒரே மாதிரியான எண்ணத்தை எப்படியேல்லாம் உருவாக்குகிறீர்களோ அப்படியேல்லாம் மாறும், அதுமட்டுமின்றி எப்படியேல்லாம் நீங்கள் இந்த உலகில் உங்கள் வாழ்க்கையை மிகைப்படுத்தி வாழ வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அப்படியேல்லாம் நிஜ உலகில் நடக்க ஆரம்பிக்கும்.

நம் எண்ணங்களுக்கு இயற்கையாகவே காந்தச் சக்திகள் அதிகமாக உண்டு, நாம் எந்த பொருட்களைப் பற்றி யோசிக்கிறோமோ அந்த எண்ணத்திற்கு காந்த சக்திகள் அதிகமாகி அது நம்மிடம் பொருளாக வந்து சேர்கிறது.

அதனால் ஒவ்வொரு எண்ணமும் முக்கியத்துவம் என்பதால் எது பொதுநலத்துடன் மகிழ்ச்சியை வாரி வழங்குகிறதோ அதை மட்டும் நினைத்துக்கொண்டே வாழுங்கள் கூடிய விரைவில் அது உங்களுக்கு வந்து சேரும்.

## *செய்முறை:*

உதாரணமாக பணம் வேண்டுமென்றால் எதற்காக வேண்டும்? என்ன தேவை? எதற்கு தேவை? கடன் அடைக்க! ஏன் கடனை அடைக்க வேண்டும்? கடன் காரன் தொல்லை! அதனால் குடும்பத்தில் நிறைய பிரச் சினைகள் ஏற்பட்டு வீட்டில் அனைவருமே நிம்மதியற்று இருக்கின்றனர். இப்போது கடன் என்பது அனைவரை யுமே பாதிப்பினுள் ஆழ்த்தியுள்ளது. இந்த நிலையில் அனைவரின் பொது நலத்தை கருதிஅந்த பணத்தை சம்பாதிக்க வேண்டும்.

அதனால் “பணம், வளம், செல்வ செழிப்பு” என்று இவற்றின் வருகையின் மீது அதிக கவனம் செலுத்த வேண்டும்.

உதாரணமாக காலையில் எழுந்தவுடன் பத்து முறை “நான் அதிக சந்தோஷமாக இருக்கிறேன் ஏனென்றால் நிறைய பணம் எனக்கு கிடைத்துக் கொண்டே இருக்கிறது” இப்படி கூறிக்கொண்டே இருந் தால் நிஜத்தில் நடக்க ஆரம்பிக்கும்.

## பிரபஞ்சத்தோடு ஒன்றாகி விடுங்கள்:

நீங்கள் காட்சிப்படுத்துவது உங்களுக்கும், எல்லை யில்லாத பிரபஞ்சத்திற்கும் ஏற்படும் ஒரு ஆழமான தொடர்பு. இதில் எதை நீங்கள் கேட்கபோகிறீர்கள் என் பதில் தீவிரமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு முறை யும் பயிற்சி செய்யும்போது நான் கடவுளையும் பிரபஞ் சத்தையும் முழுமையாக நம்புகிறேன் இதன்மூலம் நான் கேட்டது எனக்கு உடனடியாக கிடைக்கும் என்று அடிக் கடி கூறவேண்டும்.

## நீங்கள் கேட்பதை வேகமாக பெற ரகசியம்:

நீங்கள் வெறும் உணர்ச்சிகளையும், அதிர்வுகளை யும் மட்டும் கொடுத்தால் போதும், அதிக உணர் வோடு அது பிரபஞ்சத்தை வேகமாகவும், நேரடியாகவும் தொடர்புகொண்டு கேட்டதை அதிவேகமாக தர வழிவ குக்கும்.

## எண்ணங்களுக்கு சக்தி ஊட்டுவது எப்படி:

நாம் எந்த எண்ணங்களை மீண்டும் மீண் டும் யோசித்துக்கொண்டே இருக்கிறோமோ அதுவே நமக்கு விளைவாக மாறுவதற்கு முன் அதன் சக்தி நிலத் தில் விதை போட்டு வளர்ந்து மரமாவது போல அதிக மாக சக்தியூட்டப்பட்ட பின் விளைவுகளை விரைவாக நம்மிடம் தருகிறது.

## மூளையின் செயல் திறனை சிறப்பாக பயன்படுத்துவது எப்படி:

ஜெர்மனியின் சக்திவாய்ந்த தொழில்நுட்பங்க ளைப் பயன்படுத்தி தான் நிறைய தடவை ஒலிம்பிக்கில் முதல் இடம் பிடிக்கின்றனர்.

சக்திமிக்க காட்சிப்படுத்துதலும், சுயபிரகடனமும் செய் வது தான் உலகிலேயே மிகப்பெரும் ரகசியம். அதுமட் டுமின்றி உலகையே நம்மிடம் கட்டிப்போடும் ரகசியமும் இது தான்.

1. சக்தியூட்டும், ஒளியூட்டும் காட்சிப்படுத்துதல் அவசியம்

2. சுயபிம்பம் செய்தால்நேரடியாக பதிய வைக்கும்
3. பெரிய அளவில் சுய பிம்பம் ஏற்படுத்துவது அவசியம்
4. அதிக உணர்ச்சியூட்டும் காட்சிப்படுத்துதல் அவசியம்
5. காந்த சக்தியுடன் காட்சிப்படுத்துதல் அவசியம்

## குறிக்கோள்களுக்கு ஏற்ற பதில் கிடைக்கும் நேரம்:

மனதில் ஆழ்ந்த நிலைக்கு சென்று மனதினை தெளிவுப்படுத்தி உங்களுடைய ஆசையை மட்டும் நினைத்து அதை அடைவதற்கான துல்லியமான சரியான பதிலை காட்டு என உங்களுடைய ஆழ்மனதிடம் கேட்க வேண்டும், அது உடனடியாக ஒரு படமாக தெரியும் அல்லது யார் மூலமாகவாவது சமிக்கைகளாக ஒலிக்கும் அல்லது உங்களுக்கு தெரியாமல் நீங்களே அதை அடைவீர்கள் பிறகு கடைசியில் தான் தெரியும் அதை நீங்கள் அடைந்து விட்டீர்கள் என்று.

**“எல்லையற்ற உறுதியும், அளவில்லாத நம்பிக்கையையும் மிகவும் அவசியமாக இருக்கவேண்டும்”.**

**“எந்த அளவுக்கு உங்களுக்கு நம்பிக்கை இருக்கிறதோ அந்த அளவிற்கு அல்லது அதற்கு இணையாக நடக்கும்”.**

**“உங்களுடைய உணர்வுகளை மாற்றுங்கள் இப்போதே குறிக்கோள் அடைவதை வேகப்படுத்தும்”.**

ஓர் அமைதியான இடத்தில் கண்களை மூடிக்கொண்டு நீங்கள் எந்த உணர்வில் இருக்கிறீர்கள் என கண்டுபிடியுங்கள். அதாவது நேர்மறை அதிர்வாக உள்ளதா அல்லது எதிர்மறை அதிர்வாக உள்ளதா என

பாருங்கள். உதாரணமாக எதிர்மறை உணர்வான கடனைப் பற்றி நினைத்து அந்த உணர்வில் இருந்தால் கொஞ்சம் அமைதியாக இருந்து அந்த எதிர்மறை உணர்ச்சியை நேர்மறை சூழ்நிலையாக மாற்றுங்கள்.

அதாவது கடன் உணர்விலிருந்து “பணவரவு அதிகரித்து வருகிறது” என்ற உணர்வை உருவாக்கி மாற்றுங்கள் அப்போது அளவில்லாத ஆற்றல் அதிகமாகி பணவரவும் அதிகமாகும்.

அதேபோல் வேலை இல்லை என்றால் “வேலை கிடைத்துவிட்டது” என்ற உணர்வை அதிகப்படுத்தி உணருங்கள் அதுதான் உண்மை என நம்புங்கள் உடனடியாக நடக்க ஆரம்பிக்கும்.

நீங்கள் எந்த எண்ணத்திற்கு அதிக உணர்வை ஏற்படுத்துகிறீர்களோ அதுதான் உடனடியாக நடக்க ஆரம்பிக்கும் என்பது இயற்கையின் சமச்சீர் நிலை.

## சக்தி மிகுந்த மூளையை பயன்படுத்துங்கள்:

நம் மூளை எல்லையில்லாத ஆற்றல் படைத்தது அதுதான் நம்முள் இருக்கும் பல மில்லியன் செல்களையும், நரம்புகளையும், உறுப்புகளையும் ரத்த ஓட்டத்தையும் செயல்பட வைக்கின்றது.

1.உடலின் இயக்கமும், பிரபஞ்ச இயக்கமும் கடவுளால் உருவாக்கப்பட்ட பதிவுகள்

2. மனிதன் உருவாக்கிக் கொண்டிருக்கும் பதிவுகள்

இவை அனைத்தும் ஒன்று விடாமல் துல்லியமாக நடப்பதற்கு முக்கியமான காரணம் மூளையின் சக்தி வாய்ந்த கையாளும் திறன் தான். அது மட்டுமன்றி ஓட்

டுமொத்தமாக நம்முடைய வாழ்க்கையை முழுமையாக ஆள்வதும் அது தான்.

உடம்பின் ஒட்டுமொத்த செயல்பாடுகளையும் தன்னிச்சையாக நடப்பதற்கு அதன் முக்கியமான செயல் தான் காரணம். மிக முக்கியமாக நமக்கு தேவையான அனைத்து விதமான பழக்கங்களையும் நம்மால் உருவாக்கிக் கொள்வதற்கு நமக்கு கடவுளிடமிருந்து அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

அதனால் மூளையின் துல்லியமான செயல்பாடுகளை கற்றுக் கொண்டால் நாம் நிச்சயம் நினைத்த நிம்மதியான, சந்தோஷமான, ஆரோக்கியமான, செல்வ செழிப்பான, வாழ்க்கையை நிச்சயம் சுலபமாக வாழமுடியும். அதை பற்றிய பல பயிற்சிகள் இப்புத்தகத்தில் வழங்கப்பட்டுள்ளது.

## *செய்முறை:*

மூளைக்கு ஒரே மாதிரியான விஷயங்களை திரும்பத் திரும்ப அளித்துக் கொண்டே இருந்தால் அதை ஏற்றுக்கொண்டு செயல்படுத்தும்.

இது மூளையின் மூலமாக தான் நடக்கிறது திரும்பத் திரும்ப ஒரே விஷயத்தை பார்த்துக்கொண்டே இருப்பது, திரும்பத் திரும்ப அதே யோசித்துக் கொண்டே இருப்பது, அதையே விசாரித்துக் கொண்டே இருப்பது, அதையே திரும்பத் திரும்ப உணர்ந்து கொண்டே இருப்பது, அதே மாதிரியான பழக்கத்தை ஏற்படுத்தும் மற்றும் அதையே நம் வாழ்க்கையாக மாறி விடுகிறது.

உதாரணமாக உங்களுக்கு பிடித்த நண்பரின் ஒரு குறிப்பான செயல் அல்லது பேச்சு உங்களுக்கு பிடிக்கும் என்றால் அதை நீங்கள் யோசிக்கும்போதோ அல்லது

கவனிக்கும்போதோ மூளை அதை ஏற்றுக் கொள்ள ஆரம்பிக்கிறது, பிறகு அதற்கு தகுந்தாற்போல நீங்களும் அப்படியே பேச ஆரம்பிப்பீர்கள். இது தான் எப்போதும் அனைவருக்கும் நடக்கின்றது.

## பிரபஞ்சத்தில் பிறந்த அனைவரும் ஒன்று தான்:

உலக மக்கள் அனைவரும் ஒன்றுதான் ஏனென் றால் அனைத்து மக்களும் ஒரே மாதிரியான மூளையா ளும், இதயத்தாளும், உடல் உறுப்புகளினாலும், செல் களினாளும், தோல்களினாளும், உருவாக்கப்பட்டிரு கின்றனா்.

இதில் முக்கியமாக உடல், முக பாவனைகள், நாம் கண்டுணர்ந்த அனுபவங்கள் மற்றும் மொழிகள் மட்டும் தான் அனைவரிடமும் வேறுப்பட்டு காணபடுகிறது, மற்ற அனைத்துமே ஒரே மாதிரியான மனித மண்டலங்கள் தான். இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் உலகின் தலைசிறந்த பணக்காரரை போல் ஒரு ஏழை யாலும், நடுத்தர வர்க்கத்தினராலோ வாழமுடியும்.

ஏனென்றால் ஏழைகளாகவும், நடுத்தர மக்களாக வும் இருந்தவர்கள் தான் இன்று பணக்காரர்களாக மாறி இருக்கின்றனர் என்பதை நீங்கள் உணர்ந்து உங்களு டைய வாழ்க்கையை எந்த விதத்தில் மாற்றிக் கொள்ள வேண்டும் என்று சிந்தித்து செயல்படுங்கள்.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஒரு மனிதனை அடுத்த நிலைக்குக் கொண்டு செல்லும் ஒரே ஆயுதம் யோசிக்கும் திறனும், செயல்படுத்தும் திற னும் தான்.

நீங்கள் வறுமையில் இருக்கும் பொழுதும், பொரு ளாதார பற்றாக்குறையினால் மதிப்பற்று இருக்கும்பொ

ழுதும், இது என்னுடைய சரியான வாழ்க்கையே கிடை யாது என்று விரக்தியில் வாடும்போதும் தான் ஏதாவது ஒன்றை செய்ய வேண்டும், என்னுடைய வாழ்க்கையை முற்றிலுமாக மாற்ற வேண்டும் என்று யோசிக்கும் பட் சத்தில் நமக்கு அங்கே யோசனை சக்தி கிடைகின்றது, அப்போது அந்த யோசனைகள் நமக்கு ஒரு பொக்கிஷ மாக இருக்கும். இந்த யோசனையின் பிரம்மிக்க வைக் கும் சக்திதான் அனைத்து மக்களின் வாழ்க்கையையும் அடுத்த நிலைக்கு கொண்டு செல்கின்றது.

## *செய்முறை:*

உங்களின் வாழ்க்கையில் பெரிய அளவில் உங்களை வாட்டி எடுக்கும் பிரச்சனை ஒன்றை எடுத்துக்கொண்டு யோசியுங்கள். பண பிரச்சனை, மன பிரச்சனை, உறவில் பிரச்சினை, படிப்பில் பிரச்சனை, வேலையில் பிரச்சனை, தொழிலில் பிரச்சனை என்று எந்த பிரச்சினையை தீர்க்க வேண்டும் என்று நினைக்கிறீர்களோ அதை எடுத்துக் கொள்ளுங்கள்.

உதாரணமாக பணப்பிரச்சனை என்றால் கடன் எவ் வளவு உள்ளது என தீர்மானித்து அதை என்ன செய்ய வேண்டுமென்று உங்களிடமே கேளுங்கள், தேடுங்கள், யோசியுங்கள் நிச்சயம் அதற்கான விடை கிடைக் குமென நம்புங்கள் கிடைத்துவிடும் அல்லது அந்த கடனை எப்படி அடைப்பது என பல கோணங்களில் யோசியுங்கள்.

அதை பல பாகமாக பிரித்து கடனை திருப்பி அளிப் பதா அல்லது முழுவதாக திருப்பி செலுத்துவதா என சிந்தியுங்கள் பிறகு செயல்படுங்கள்.

அதற்கான சரியான விடையை மட்டும் தேடுகிறேன் இதற்கான விடை எனக்கு கிடைத்துவிடும் என்று முழுமையாக நம்புங்கள். அதை பற்றி தினமும் ஒரு மணி நேரம் யோசியுங்கள், எதோ ஒரு யோசனை தீப்பொறி போல் கிடைக்கும் அதை உடனடியாக செயல்படுத்துங்கள் சரியாக இருக்கும்.

அதுமட்டுமன்றி இப்புத்தகத்தை பலமுறை படித்துவிட்டு இதில் உள்ள அனைத்து விஷயங்களையும் செயல்படுத்தும் போது பல்வேறு பிரச்சனைகளை சுலபமாக தீர்க்கும் வல்லுனர் ஆவீர்கள்.

# தியானம் செய்தால் உருவாகும் அற்புத சக்தி

மக்கள் பலரும் தியானத்தை எவ்வாறு செய்ய வேண்டும் என்று புரிதல் இல்லாமலே செயல்படுகின்றனர்.

தியானம் செய்யும்போது மூச்சு சீராகிறது, மூளைக்கு அதிக புத்துணர்ச்சி ஏற்படுகின்றது, எப்போது மூளைக்கு புத்துணர்வு ஏற்படுகிறதோ அப்போதே மனம் சுறுசுறுப்பாக இருக்கும், ஆழ்ந்த அமைதியும், தெளிவும் பிறக்கும், உங்களுடைய நேர்மறையான அதிர்வுகள் அதிகமாகும், மனிதர்களை உங்களிடம் தன்னால் ஈர்ப்பீர்கள், நிறைய விஷயங்களை புதியதாக உருவாக்க தொடங்குவீர்கள், ஆரோக்கியம் கூடுதலாகும்.

மனிதனாய் பிறந்த அனைவருமே மேலே சொன்ன அனைத்து விஷயங்களுக்காக போராடிக் கொண்டிருக்கின்றனர், ஆனால் இவை அனைத்தும் சிறிது நேரம் மனதை ஒருநிலைப்படுத்தி செய்யும் தியானத்திற்குள் தான் இந்த அற்புதங்கள் மறைந்து கிடக்கின்றது. இது தான் மனிதனின் இயல்பான நிலையும் கூட.

தியானம் செய்ய செய்ய உங்களது வாழ்வில் பல முன்னேற்றங்கள் நடக்கும் உதாரணமாக தொழில் முன்னேற்றம், வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிடைக்கும், வேலையில் முன்னேற்றம் கிடைக்கும், உற வுகள் வலுவடையும் மற்றும் உங்களது அனைத்து தேவைகளும் பூர்த்தியாகும்.

## *செய்முறை:*

எப்போதெல்லாம் நேரம் கிடைக்கிறதோ அப்போ தெல்லாம் வசதியான சத்தம் இல்லாத இடத்தில் அமர்ந்து கொள்ளுங்கள்.

சிறிய இருட்டான இடமாக இருந்தால் ஆழ்ந்த நிலைக்கு உடனடியாக சென்று விடுவீர்கள் பின் கண் களை மூடிக்கொள்ளுங்கள்.

மூச்சை பொறுமையாகவும், நிதானமாகவும் இழுத்து வெளிவிடுங்கள் இப்படி ஐந்து முறை பொறு மையாக செய்யுங்கள்.

மூச்சை உள்ளிழுக்கும் போது உங்கள் மனதில் சுழன்றுக் கொண்டிருக்கும் தேவையில்லாத எண்ணங் களை மட்டும் நினைத்து மூச்சை வெளியேற்றும் போது அப்படியே அந்த எண்ணங்களை வெளியேற்றுங்கள்.

இதேபோல் இருமுறை அல்லது மூன்று முறை மன தில் உள்ள தேவையில்லாத எண்ணங்களை வெளி யேற்றுங்கள் இப்போது உங்கள் மனம் அமைதியாகவும், தெளிவாகவும் இருக்கின்றது. முடிந்த அளவு உங்கள் கவனத்தை செலுத்தி சிறிது நேரம் அதிலேயே தியா னித்துக் கொண்டிருங்கள் 10 முதல் 15 நிமிடம் செய்யுங் கள்

தொடர்ந்து 21 நாட்கள் செய்தால் மேலே கூறின விஷயங்கள் அனைத்தும் நிஜத்தில் நடக்கும்.

# இதை செய்தால் நடக்கும் எல்லையில்லாத பயன்கள்

இப்போது உங்களிடம் அல்லது உங்களது மனதில் பல யோசனைகளும், குறிக்கோள்களும், மற்ற தேவை யற்ற எண்ணங்களும் உள்ளன. அவை அனைத்தையும் சிறிது நேரம் மறைவாக ஒளித்து வைத்திருங்கள்.

எந்த ஒரு குறிக்கோளை தற்போது அடைய வேண் டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களோ அதனை மட் டும் எடுத்துக்கொள்ளுங்கள். பிறகு அதில் உங்களு டைய முழு கவனத்தை செலுத்த வேண்டும். உதாரண மாக உங்களுக்கு ஒரு லட்சம் பணம் வேண்டுமென்றால் அந்த பணத்தை பெறுவதற்கான இலக்கை மட்டும் மன தில் நினைக்க வேண்டும்.

*செய்முறை:*

- மனதில் தெளிவு அவசியமாக இருத்தல் வேண்டும்
- தியானத்தின் அதிசய சக்தியின் பயிற்சியை மேற் கொண்ட பிறகு இதனை தொடர வேண்டும்.
- மனதில் மீண்டும் ஒரு முறை முழுமையான தெளிவு அவசியமாக இருத்தல் வேண்டும்.
- பிறகு ஒரு லட்சம் ரூபாய்க்கான எண்ணினை மன தில் வைத்து பார்க்க வேண்டும்.
- பிறகு உங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட சந்தோஷ மான நிகழ்வுகளை நினைத்து கொண்டு மனதினை சந்தோஷமாக வைத்துக்கொள்ள வேண்டும்.
- அந்த சந்தோஷமான மனநிலையில் மீண்டும் அந்த ஒரு லட்சம் ரூபாயை கண்முன் நிறுத்த வேண்டும்.
- இப்போது உங்களிடம் ஒரு லட்ச ரூபாய் இருந்தால் என்ன செய்வீர்கள் என்பதனை மனதார சந்தோஷ மாக உணர வேண்டும்.
- இதோடு அந்த கடந்த காலத்தில் ஏற்பட்ட சந்தோ ஷத்தையும் ஒன்று சேர்த்துக் கொள்ளுங்கள்.
- அப்போது அந்த இரண்டு சந்தோஷங்களையும் ஒன்று சேர்த்து செயல்படுத்தும் அந்த பதிவு மிகப் பெரிய அதிர்வோடும், உணர்வோடும் உங்கள் ஆழ் மனதில் பதியும்.
- இதை மீண்டும் அப்போதே இரண்டு முறை செய்து பாருங்கள் திரும்பவும் அதிக உணர்வோடு அப்ப டியே ஆழ்மனதில் பதிவாகும்.
- நீங்கள் ஆழ்மனதில் அதிக உணர்வோடு எதைப் பதிய வைக்கிறீர்களோ அது நடந்தே தீரும் என உணர வேண்டும்.
- இதை செய்யும்போது மற்ற எந்த எண்ணங்களும் உங்களை தொந்தரவு செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.
- எந்த எண்ணங்களும் தொந்தரவு செய்யாமல் இருக்க முந்தைய அத்தியாயத்தில் கொடுத்த

தியான பயிற்சியை தொடர்ந்து ஒரு மாதம் செய்த பிறகு தான் மேலே சொன்ன அனைத்தும் கைகூடி வரும்.

- இதை நீங்கள் தொடர்ந்து செய்தால் மூன்றே மாதத்தில் பெரிய மாற்றங்களை உங்களின் வாழ் வில் நீங்கள் காணமுடியும் என்பது தான் உண்மை.

# நிறைய நேரத்தை பயன்படுத்துவது எப்படி

மக்கள் தங்களுக்கு கிடைக்கும் சிறிய நேரத்தையும் தேவையில்லாத பேச்சினாலும், யோசனையினாலும் அழித்துக் கொள்கின்றனர், உங்களுக்காக ஐந்து நிமிடம் கிடைத்தாலும் அல்லது பத்து நிமிடம் கிடைத்தாலும் அதை துல்லியமாக உங்களுடைய முன்னேற்றத்திற்கும், மற்றவர்களுக்கு உதவி செய்வதன் மூலம் ஏற்படும் சந்தோஷத்திற்கும் அதாவது பொது நலத்திற்காகவும் பயன்படுத்துதல் வேண்டும்

உலகில் உள்ள அனைவருக்குமே வேலை அல்லது தொழில், குடும்பம், நட்பு, சமுதாயம் என அனைத்துமே இருக்கின்றது. இந்த சமயத்தில் அவ்வபோது ஒரு மணி நேரம் இல்லையேன்றாலும் சிறிது நேரமாவது மிஞ்சி இருக்கும் அந்த நேரத்தை சந்தோஷமாக, ஆக்கப்பூர்வமாக பயன்படுத்துங்கள்.

## செய்முறை:

உதாரணமாக வேலைக்கு செல்ல ஒன்றிலிருந்து இரண்டு மணி நேரம் பயணம் செய்ய வேண்டுமென்று இருந்தால் அப்போது அந்த ஆக்கப்பூர்வமான விஷயத்தை பயன்படுத்துங்கள்.

வேலையில் இருக்கிறீர்களேன்றால் உணவு இடை வேளை ஒரு மணி நேரம். அரை மணி நேரத்தில் உணவு அருந்துகிறீர்கள் என்றால் மீதி அரை மணி நேரத்தை தியானத்திற்காக பயன்படுத்துங்கள், எப்போதெல்லாம் உங்களுக்கு நேரம் கிடைக்கிறதோ அப்போதெல்லாம் இதைச் செய்யுங்கள்.

எல்லையற்ற பேரறிவின் வளங்களை இதை செய்தால் அள்ளிக் கொள்ளலாம்:

நம் மனித இனத்தின் ஒட்டுமொத்த வளங்கள் அனைத்தும் எல்லையில்லாத பேரறிவின் மூலமாகப் பெற்றது என்பதை நாம் உணர வேண்டும். எல்லையில்லாத சக்தியில் கவனத்தை செலுத்தி அதாவது எல்லையில்லாத சக்தி என்பது அபரிமிதமான வளங்களாகும். அதனால் அளவற்ற வளங்கள், செல்வச்செழிப்பு, உயர்ந்த வெற்றிகள் என அனைத்திலும் கவனத்தை செலுத்தி அதை எல்லையற்ற அளவில் பெறுங்கள்.

இந்த அளவற்ற பலன்களை பெற முதலில் அது இருப்பதாக நினைத்து நம்புதல் அவசியம், இதையடுத்து தொடர்ந்த சிந்தனைகளை இதன் மேல் செலுத்துதல் வேண்டும்.

அதாவது ஒரு பெரிய காலி பாத்திரத்தில் தங்க திரவத்தை நிரம்பி ஊற்றுவதை போல நம் ஆழ்மனதில் ஆழமான சிந்தனைகளை அபரிமிதமாக தொடர்ந்து ஒரே மாதிரியாக பதியவைக்க வேண்டும். உங்கள் ஆழ்மனதில் எந்த விஷயம் ஆழமாகப் பதிகின்றதோ அதைதான் நிஜத்தில் அனுபவிக்கிறீர்கள் நீங்கள். எந்த விஷயம் உயர்ந்தது, சிறந்தது, அதிக நன்மை தரக்கூடியது

என்று நினைக்கிறீர்களோ அதை சீராக நினைத்துக் கொண்டே இருந்தால் வளங்களை வெகு விரைவில் பெற முடியும். வளங்கள், செல்வச்செழிப்பு, பணம் என்ப தெல்லாம் ஒரு யோசனைகள் மட்டுமே.

உங்கள் முழுமையான கவனத்தை வளங்களில் குவித்துக் கொண்டே இருந்தால் நினைத்தது உருவா கியே தீரும். “செல்வ செழிப்பு, வளம், உயர்வு” என்பதை எப்பொழுதும் உங்களுக்குள் மந்திரம் போலச் சொல் லிக் கொண்டே இருங்கள். எல்லையற்ற பேரறிவின் வளங்கள் அனைத்தும் வற்றாதவையாகவும், எப்போதும் தீர்ந்து விடாதவையாகவும் இருந்து வருகிறது.

உதாரணமாக கடந்த இருநூறு வருடங்களாக உலகில் பிரம்மாண்டமான வளர்ச்சியும், முன்னேற்ற மும் நடந்துள்ளது, வானுயர்ந்த கட்டிடங்கள், தகவல் தொழில்நுட்பங்கள் விளையாட்டு துறை வளர்ச்சி, கலாச்சார வளர்ச்சி என சொல்லிக்கொண்டே போக லாம். இன்னும் பல துறைகளிலும் பெரிய அள வில் வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளது உங்களால் இதை யோசித்து பார்க்க முடிந்தால் நிச்சயம் உணர முடியும்.

இந்த பல நூறு ஆண்டு கால வளர்ச்சிகள், முன் னேற்றங்கள், யோசனைகள் அனைத்தும் முடிவில்லா பேரறிவு எனும் கடவுள் கொடுத்த ஒரு பொக்கிஷம் தான் அதனால் வருகின்ற அடுத்த ஐம்பது அல்லது நூறு வருடங்களுக்குள் ஏன் ஆயிரம் வருடங்களுக்குள் இந்த உலகம் எப்பேற்பட்ட வளர்ச்சி அடையும் என்பதை அவ ரவர் எடுக்கும் முயற்சியிலும், யோசனையிலும் தான் நிறைந்திருக்கிறது.

அதுமட்டுமன்றி கடந்த ஐம்பது வருடத்தை எடுத்துக் கொள்ளுங்கள் அப்போதிலிருந்து இந்த காலகட்டங்கள் வரைக்கும் லட்சக்கணக்கான மக்களில் பலர் மில்லி யனராகவும், பில்லியனராகவும், பெரும் பணக்காரராக

வும், உயர்ந்த செல்வந்தர்களாகவும் மாறியுள்ளனர் என்பது உண்மையில் குறிப்பிடதக்கது.

ஓர் ஆராய்ச்சியின் முடிவில் உலகில் தினமும் ஒருவர் மில்லியனர் ஆகிறார் என்கின்றது. அதனால் செல்வம் என்பதை முதலில் சுலபம் என்று மாற்றிக் கொள்ளுங்கள். நீங்கள் எப்போது சுலபமாக பெற முடியும் என்று நினைக்கிறீர்களோ அப்போதுதான் அந்த அதிர்வுக்கு ஏற்றார்போல் உங்களிடம் அது வந்து சேரும்.

## *செய்முறை:*

செல்வ செழிப்பு என்பது ஒரு எண்ணத்தின் விளைவுகள் தான், வறுமை என்பதும் ஓர் எண்ணத்தின் செயல் விளைவுகள் தான் அதனால் எப்போதும் சிதறிக் கொண்டிருக்கும் உங்களுடைய எண்ணத்தை ஒருநிலைப்படுத்த வேண்டும்.

ஒரு நிலைப்படுத்திய பின் ஒவ்வொரு மணி நேரத்திற்கு மூன்று முறை இந்த சக்திமிக்க வாக்கியத்தை நீங்கள் கூற வேண்டும்.

- ☐ நான் செல்வ செழிப்பை திறந்த மனதுடன் ஏற்றுக் கொண்டிருக்கிறேன்
- ☐ நான் எல்லையில்லா செல்வச் செழுப்பில் மூழ்கி கொண்டிருக்கிறேன்
- ☐ என் வாழ்வில் செல்வ வளங்களில் நிரம்பி வழிகின்றன

இந்த மூன்று வாக்கியங்களிலும் அபரிமிதமான சக்தி இருக்கின்றது. இதை தொடர்ந்து பல நாட்கள் கூறிக் கொண்டே இருங்கள். இந்த சக்தி நிறைந்த வாக்கியங்களை அப்படியே உள்வாங்கிக் கொள்ளும்போது நீங்கள் இருக்கும் இந்த நிலைதான் உங்களுடைய மனதில் தேக்கி வைத்திருக்கும் எண்ணங்களின் நிலை. இப்

போது உங்கள் மனதில் உள்ள தேவையில்லாத எண்ணங்களை வெளியேற்ற வேண்டும் என்று உங்களுக்கு இப்போது புரிகின்றது போல் தெரிகிறது. இந்த பயிற்சியை செய்யும் ஒவ்வொரு முறையும் அதிக ஆர்வத்தோடும், உற்சாகத்தோடும் செய்யுங்கள். அப்போதுதான் உங்கள் மனதில் உற்சாகம் ஏற்பட்டு நடக்க ஆரம்பிக்கும்.

# மிகவும் உருக்கமாக உங்கள் கடவுளிடம் உரையாடுங்கள் வேண்டியது கிடைக்கும்

- கடவுளிடம் வேண்டியது கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் விசுவாசமாக இருங்கள்.
- கடவுளே நீங்கள் தான் எங்கள் மொத்த கஷ்டங்களையும் உடனடியாக போக்க வேண்டும்.
- கடவுளே, நீங்கள் என்னுடைய வருமானத்தை மும்மடங்கு தருகிறீர்கள்
- உடனடியாக! இப்போதே! கடவுளே அளவற்ற பணமும், கூடுதல் ஆரோக்கியமும், சந்தோசமான நிகழ்வையும் தாருங்கள்.

- நீங்கள் எப்படி மற்றவர்களுக்கு சந்தோஷத்தை தந்தீர்களோ அதேபோல அளவில்லாத செல்வ செழிப்பு, முன்னேற்றம், சந்தோஷத்தை உடனடியாக வழங்குங்கள்.
- கடவுளே நல்ல பண்பு நலன்களைக் கொண்ட சொந்தக்காரர்களையும், நல்ல குடும்ப நண்பர்களையும் தாருங்கள்.
- உங்களுடைய ஆசீர்வாதமும், அளவற்ற அன்பும், செல்வ செழிப்பையும் எனக்கு அருள் புரியுங்கள்.
- எப்போதும் உங்கள் துணையையும், பாதுகாப்பையும் வழங்குங்கள்.
- மக்களுக்கு தேவையான சேவைகளை அற்புதமாக இப்போதிலிருந்து என் மூலம் வழங்குகிறீர்கள்.
- என்னுடைய ஒவ்வொரு யோசனையும் உங்களிடம் இருந்து தான் வருகிறது.
- உங்களுடைய ஆசீர்வாதத்தால் உடனடியாக இப்போதே என் வாழ்க்கை முன்னேற்றம் அடைகிறது.
- எப்போதும் தைரியமாக, வெற்றிகரமாக இருக்கவும், நிறைய பணத்தை சம்பாதிக்கவும் வழியை காட்டுங்கள்.
- பேரின்பம், பெரும் மகிழ்ச்சி, அற்புத நிம்மதி பெறும் சில குறிப்புகளை என்வசம் ஆக்குங்கள்.
- அனைவருக்கும் அற்புதமான பொருளாதார முன்னேற்றம் வழங்குங்கள்.
- உங்கள் வழிகாட்டுதலில் என் வாழ்க்கை மாறுகிறது. பல அற்புதமான, நல்ல விதமான விஷயங்களை அள்ளி வழங்குங்கள்.

## உணர்வுப்பூர்வமாக செயல்படுத்துங்கள்:

- ♦ துல்லியமாக எவ்வளவு தேவை? எவ்வளவு கேட்டாலும் கிடைக்கும் கூறுங்கள்?

- உங்களுடைய மொத்த எண்ணமும் விரைவில் தான் இருக்க வேண்டும்
- ஏன் நம்முடைய மனதில் நிறைய எதிர்மறை எண்ணங்கள் வருவதற்கு காரணம் நமது கடந்த காலத்தில் அனுபவித்ததாலும் அதன் பின் மீண்டும் யோசிப்பதும் தான் அவை அழையா விருந்தாளி யாக காரணம்.
- ஒவ்வொருநாளும் நீங்கள் வேறு வேறான மனக் காட்சிப் படுத்துங்கள்

## சில தகவல்:

- ஒவ்வொரு அணுவிலும் அதிர்வுகள் இருக் கின்றன. அவை பிரம்மாண்ட வேகத்தில் சுழன்றுக் கொண்டிருக்கின்றது. அதாவது நீங் கள் நினைக்கும் சின்ன விஷயங்கள் முதல் பெரிய விஷயங்கள் வரை பிரம்மாண்ட ஆற் றல் மற்றும் அதிர்வுகளை வெளிப்படுத்துவதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.
- உண்மையில் அந்த அணு எந்த வடிவங்களுக் கும் மாறும் திறனுடையவை இதுதான் இயற் கையின் கொள்கை.
- அந்த அணுக்கள் நம் எண்ணங்களால் கட்டுப் படுத்தப்படுகிறது, உருவாக்கப்படுகிறது.
- இதில் சரியான துல்லியமான எண்ணத்தை ஆல்ஃபா அலைவரிசையில் செலுத்தும்போது அது உங்கள் உடம்பணுக்களில் போய் பர வுகிறது, அதன் மூலம் நீங்கள் வேண்டியதை பெற்று விடுவீர்கள் உதாரணமாக உங்களுக்கு வேலை வேண்டும், வீடு வேண்டும் என்றால் இதன் மூலம் உடனடியாக பெற முடியும்.

# பயிற்சியின் போது செய்யக்கூடிய முக்கியமான விஷயங்கள்

- நீங்கள் உங்களிடம் சொல்லும் வாக்கியங்கள் பிம்பங்களை உருவாக்கிக் கொண்டிருக்கும் போது வெளி உலகில் அனைத்து விஷயங்களும் உடனடியாக மாறுவது போல் செய்வது நினைத்ததை வேகமாக வரவழைக்கும்.
- உங்களுக்கு வேண்டியது மற்றவர்களுக்கு வேண்டுங்கள் நிச்சயம் நடக்கும்.
- அதாவது அந்த பிம்பங்களில் நீங்கள் இருப்பீர்கள் ஆனால் நினைப்பது பொதுவாக உங்களை பார்த்தவர்களாக இருக்கவேண்டும்.
- உண்மையில் உங்கள் எண்ணங்கள் எங்கிருந்து நொடிப்பொழுதில் வருகிறது அது தெரிந்தால் மாற்ற முடியுமா என்றால் நிச்சயமாக முடியும் அது எப்படி என்று பார்ப்போம் காலியான இருட்டான உலகத்தில் இருந்து வந்துகொண்டே இருக்கிறது.

- நாம் நினைக்கும் கற்பனையான பல சந்தேகத்தில் 90 சதவிகித சந்தேகங்கள் நடப்பதே இல்லை என்பதுதான் உண்மை.
- நீங்கள் எடுக்கும் செயல்களுக்கு ஏற்ப உங்கள் மூளை அதன்படி செயல்பட ஆரம்பிக்கிறது, இது எப்படி கூறுவதெனில் நீங்கள் சாதாரண பதவியில் வேலை செய்து கொண்டு வருகிறீர்கள், திடீரென்று உங்களுக்கு உயர்பதவி தரப்படுகிறது என்றால் அது வெளிப்படுவதற்கு காரணம் உங்கள் செயல்கள் தான். ஏனென்றால் அதை நீங்கள் நினைத்துக்கொண்டேயிருந்தீர்கள்.
- நீங்கள் எடுக்கும் எண்ணங்களுக்கு ஏற்ப செயல்பட ஆரம்பிக்கிறது. இது நிச்சயமான உண்மை, முதலில் தடுமாற்றம் ஏற்பட்டு நாளடைவில் அது சாத்தியப்படுகிறது, அதனால் தான் உயர்பதவி உருவாகிறது. நம்முடைய கட்டுப்பாட்டில் தான் அது வேலை செய்திருக்கிறது.
- உதாரணமாக காலை 11 மணி ஆகிறது சாப்பிடவே இல்லை பசி எடுக்கின்றது சாப்பிட வேண்டும் என்ற அதிகமான உணர்வை உருவாக்கி அந்த உணர்வு உங்களை சாப்பிடத் தூண்டி அந்தச் செயலில் உடம்பை செயல்பட வைக்கின்றது.

# பணம், பணம், பணம்

- ➢ **உங்கள் எண்ணம் தான் பணம்**
- ➢ **உங்கள் உணர்வு தான் பணம்**

பணம் என்பது சந்தோஷமான மனநிலை எப்ப டியோ, கவலையான மனநிலை எப்படியோ அதே போல் தான் பணமும்.

பணம் என்பது உங்கள் மனத்தில் பெரிய விஷயமாக உள்ளது. முதலில் அதை சுலபமாக பெறமுடியும் என தீர் மானம் செய்து கொள்ளுங்கள், அதை பெறுவதும் மிக சுலபமான விஷயமாகும். பணம் என்னிடம் இருக்கிறது என நினைக்கும்போது அது அபரிமிதமாக கிடைக்கி றது. “பணம் என்பது மிக சிறிய விஷயம் தான் எனக்கு, அதனால் அது எனக்கு மிகவும் சுலபமாக வருகிறது” என கூற வேண்டும்.

## பணத்தை அடைய முடியாததற்கு கார ணம் இது தான்:

- ❖ **என்னால் அதிக பணம் சம்பாதிக்க முடியாது**

- ❖ **அதிகமாக சம்பாதிக்க நிறைய நாட்களாகும்**
- ❖ **முயன்று பார்த்தேன், என்னால் முடியவில்லை**

இவையனைத்தையும் இப்போது யோசியுங்கள்,

- சின்ன வயதில் எதை பார்த்ததால் இப்போது பணம் வரவில்லை?
- சின்ன வயதில் எதை கேட்டதால் இப்போது பணம் வரவில்லை?
- சின்ன வயதில் எதை அனுபவப்பட்டதால் இப் போது பணம் வரவில்லை?

உண்மையில் அதிர்வு, சக்தி, ஆற்றல் மட்டும் தான் உங்களின் மனதில் இருக்கும் தடைகளை நீக்கி பணம் உங்களுக்கு சுலபமாகவும், சீராகவும், வேகமாகவும், பெருகிக் கொண்டும் வருகிறது என ஆணித்தரமாக நம்ப வேண்டும்.

பணம் ஒரு எண்ணம், அது உங்களிடம் தாராளமாக இருப்பது போல் நினைக்க வேண்டும். பணத்தின் எண் ணங்கள் மனம் நிறைய இருப்பது போல் காட்சிப்படுத்த வேண்டும்.

பணத்தின் மீது கவனம் செலுத்தும்போதும், மனமு ழுவதும் பணத்தில் மூழ்கும் போதும், பணத்தின் சக்தி உங்களிடம் மாபெரும் சக்தியாக மாறி பணம் உங்களிடம் வந்து சேர வழிவகுக்கும்.

## இப்போது உங்களிடம் ஒரு சபதம் எடுத்துக்கொள்ளுங்கள்:

- ❖ இப்போது என்னுடைய முழு கவனமும் என் குறிக் கோளில் மட்டும் தான்.
- ❖ முதலில் நான் நினைத்த துல்லியமான பணத்தை பெற போகிறேன்.
- ❖ என்னுடைய குறிக்கோளை அடைந்தே தீருவேன்.
- ❖ என் குறிக்கோளே மிகபெரும் பணத்தை சம்பாதிப் பது தான்.
- ❖ நானும் மிக பெரும் பணக்காரர்களை போல் பணத்தை சம்பாதிப்பேன்.
- ❖ நான் அதிக பணத்தை சம்பாதிக்க திட்டம் தீட்டி விட்டேன். வேறு வழியின்றி அடைந்தே தீருவேன்.
- ❖ அதை அடைவதற்கான துல்லியமான வழி எனக்கு தெரிகிறது.
- ❖ பிரச்சனை ஏதேனும் வந்தால் என் எண்ணங்கள் அனைத்தும் என் குறிக்கோளை அடைவது மட்டும் தான். இரண்டாவது தான் பிரச்சனை. அதையும் தூசி தட்டிவிடுவேன் என இவையனைத்திலும் தெளிவாக இருக்க வேண்டும்.

இதை பயிற்சியினை உங்கள் கண்களை மூடிக்கொண் டும் அல்லது கண்களை திறந்து கொண்டும் மனதை அமைதி நிலையில் வைத்து செய்யும்போது அற்புத விளைவுகளை பெறமுடியும்.

## பணத்தை கவர்ந்திழுக்கும் பயிற்சி:

- ➢ என்னிடம் பணம் குறைய குறைய பல வழியில் மிகு தியாக வந்து கொண்டிருக்கிறது.

- எனக்குள் இருக்கும் பணத்தடைகள் அனைத்தும் தகர்த்து தூள் தூளாக்கி வெளியேற்றப்படுகிறது.

முதலில் உங்கள் மனதினை விரிவடைய செய்ய வேண்டும். நீங்கள் கூறும் பணத்தை அதில் போவது போல் மாற்ற வேண்டும். உங்களுடைய குறிக்கோளை அதிகாலையிலும் இரவிலும் செய்யும் போது அதிக சக்தி வாய்ந்ததாக மாறுகிறது. உங்கள் மனம் பரந்து விரிந்திருப்பதாக மாற்ற வேண்டும், உணர வேண்டும்.

- நீங்கள் உங்களின் தைரியத்தை அனைவரது முன் நிறுத்துங்கள். உங்களை முழுமையாக சமுதாயத்தில் எந்த பயமும் இன்றி முழுமையாக வெளிப்படுத்தி கொள்ளுங்கள்.

- நான் மிக உயரிய குறிக்கோள்களை இப்போது செயல்படுத்திக் கொள்கிறேன். அனைத்துமே எண்ணம் தான்.

அதனால் அனைத்து விஷயங்களையும் வேறாக மாற்ற வேண்டும்.

## நேர்மறையாக வாழ்வதற்கான பயிற்சி:

- என் திறனை உயர்த்துகிறேன், அதனால் அதிக மக்களிடம் நிறைய பாராட்டை வாங்குகிறேன்.
- என் உள்ளுணர்வு எந்த எதிர்மறை எண்ணங்களையும் எனக்குள் வெளிப்படுத்துகிறது.
- என் மனம் மிக நேர்மறையாகவும், தூய்மையாகவும் இருக்கிறது.
- என் மனத்தின் எண்ணங்கள், செயல்கள் அனைத்தும் தைரியம், திறமை, செல்வம், பணக்கார தோற்றம், தொழிலதிபர் தோற்றமாக வெளிபடுகிறது.

- இப்போது என் மொத்த வாழ்கையும் மாறி, நான் என் முழுமையான சந்தோஷம், மகிழ்ச்சியை ஒவ் வொரு நாளும் உணருகிறேன்.
- என் மனதினுள் மொத்தமாக பணக்காரனாகவும், செல்வந்தராகவும், மற்றவருக்கு உதவுபவனாகவும் உருவாகி இருக்கிறேன்
- நான் பிரச்சனைக்கு ஏற்றபடி துல்லியமாக சிந்தித்து செயல்படும்போது வெற்றி பெறுகிறேன்.
- என் மனமே எனக்கு ஒரு கோடி ரூபாயை வேகமாக அடைய வழிக்காட்டுகிறது. அதற்கான தெளிவான வழியை எனக்கு கொடுத்து என்னை அவ்வழியில் செயல்படுத்துகிறேன்.
- என்னிடம் ஒரு மணி நேரம் இருந்தாலும் கூட நான் அதை பயன்படும்படி செயல்படுத்துகிறேன்.
- அதிக திறமையான மனிதர்களின் நல்ல பழக்கங் களை என் மனம் இப்போதே வெளிப்படுத்துகிறது.
- நான் தெளிவாகவும், புரியும்படியும், கோர்வையாக வும் பேசுகிறேன்.
- என்னுடைய சேவை மற்றவரது வாழ்க்கையை உயரிய மாற்றங்களையும், வெற்றிகளிலும் தவழ செய்கிறேன்.
- நான் சக்தி வாய்ந்த மிக அற்புதமான குறிக் கோளை அடைகிறேன்.
- நான் என் குறிக்கோளுக்கு ஏற்றபடி நடந்து கொள்கிறேன்.
- நான் தன்னம்பிக்கை, திறமை, உயர்ந்த தகு தியை வைத்துக் கொண்டுள்ளேன்.
- என்னிடமுள்ள அனைத்து நல்ல விஷயங்களுக் கும் நன்றி.

இவையனைத்தும் நம் மனத்தில் ஆழமாக பதிகி றது, அப்படியே நடக்கிறது.

இதுவரைக்கும் நாம் உருவாக்கிய காட்சி மற்றும் கட்டளைக்கேற்ப தான் இவ்வுலகில் இருக்கின்றோம்.

இப்போது உங்களுக்குள் உருவாக்கும் காட்சி செல்வ வளம், உயரிய மனிதனின் சிந்தனை, நல்லொ ழுக்கமும் என நினைத்துக்கொள்ளலாம்.

## எப்படி உங்கள் விளைவை சக்திவாய்ந்த தாக பதியவைப்பது:

நமக்கு தேவையான விஷயங்கள் அனைத்தும் இந்த இரு வழிகளின் மூலம் மனத்தில் பதிய செய்ய வேண்டும்.

- **சக்தி வாய்ந்த சுயக்கட்டளை**
- **சக்தி வாய்ந்த காட்சிப்படுத்தும் முறை**

நாம் அடிக்கடி நம் மனத்தில் எதிர்மறையாகவே எண்ணங்களையே யோசித்துக்கொண்டு இருப்போம், அதற்கு சான்றாக நான் இதை செய்தால் தோல்வியடை வேனோ, மற்றவர்கள் என்னை கேளி செய்வார்களோ, குற்றம் கண்டுப்பிடிப்பார்களோ என்ற பயம், அதற்கு ஏற்ற தகுதி என்னிடம் உள்ளதா என்ற சந்தேகம், இவைய னைத்தும் தோல்விக்கு வழிவகுக்கும் கட்டளைகள் மற் றும் காட்சிகள்.

நமக்கு கடந்த காலத்தில் நடந்த எதிர்மறையான நிகழ்வுகள் அனைத்தையும் நாம் இப்போது தொடர்ந்து காட்சிப்படுத்தி கொண்டும், அதை ஆழமாக மனத்தில் பதியவைத்து கொண்டும், அதே மாதிரியான விளைவை பெறுவதற்கும் இதுவே முக்கியமான காரணமாக உள் ளது.

இந்த சுயக்கட்டளை மற்றும் காட்சி படுத்துவது மூலமாக நம் யோசனைகளையும், சிந்தனைகளையும் நம் வெற்றிக்கும் நல்ல உயர்ந்த பழக்கத்திற்கும் ஏற்றபடி மாற்ற வேண்டும். உயரிய மனபாவம் கொண்ட மனித ராக மாறுவதற்கு இதனை பயன்படுத்தலாம்.

நீங்கள் உங்களுடைய குறிக்கோளை சாதிப்பதற் கும், சமுதாயத்தில் ஒரு புகழ்பெற்ற மனிதராக விளங் குவதற்கும் உங்களால் முடியும், தொடர்ந்து வெற்றியை உங்கள் பாதையில் ஊற்றி அதை உங்கள் காலடியில் கொண்டு வர முடியும், இவையனைத்தும் உங்களிடம் இருந்தால்...

**“கடைசி விளைவை மட்டும் உறுதியாக மனத்திரையில் வடிவமைக்க வேண்டும்”**

நீங்கள் உங்கள் கண்களை மூடிக் கொண்டு மனக் காட்சி படுத்தும் போது நீங்கள் ஏற்கனவே அடைந்து விட்டது போல் அதை உணர வேண்டும்.

ஏனெனில் கடைசி விளைவை உணரும்போது அந்த இலக்கை நீங்கள் ஏற்கனவே அடைந்து விட்டது போல் ஏற்படும் அதிகபடியான சந்தோஷம் உங்களை உண்மையாக உங்களிடம் அந்த குறிக்கோள் இருப் பதை போன்று உங்கள் ஆழ்மனதினை மாற்றும்.

அப்படி இந்த விஷயத்தை தினமும் செயல்படுத்திக் கொண்டே இருக்கும் போது அது உங்களிடம் வந்தே தீரும். ஏனெனில் இவையனைத்தும் காரண காரிய விதிக்கேற்றப்படி நடப்பதே காரணம்.

உங்களிடம் சந்தோஷம், அன்பு, நிம்மதி, ஆரோக்கியம் இருப்பதாக உணரும் போது அதுவே உருவாகும். ஆழ்மனதில் பதிய வேண்டும் என்றால் உணர்வு ஒன்றே இதில் முக்கியம்.

# உங்கள் குறிக்கோளை மனத்தில் பதித்து விட்டால் விளையும் அற்புதம்

சுயகட்டளைகளும், மனக்காட்சியுடன் சேர்ந்த உணர்வுகளும் மனத்தில் சீக்கிரமாக பதிய காரணமாக இருக்கின்றன.

உங்களுக்கு வேண்டிய விஷயம் உங்கள் ஆழ்மனத்தில் பதித்து விட்டால் அது பிரபஞ்சத்திற்கு சென்று உங்கள் விளைவை துல்லியமாக உங்களிடம் வர செய்துவிடும்.

**“உணர்வு எண்ணங்களின் ஆற்றலை அதிகரிக்கிறது”**

நாம் உணர்வுபூர்வமாகவும், துல்லியமான எண்ணத்துடனும் ஒரு குறிக்கோளில் யோசிக்கும் போது அந்த செயலின் ஆற்றல் அதிகரிக்கிறது. அதோடு அது நடைபெறவும் ஆரம்பிக்கிறது.

இந்த விஷயத்தை நாம் திரும்ப திரும்ப செய்யும் போது அதை யார் தடுத்தாலும் உங்களிடம் வந்தே தீரும்.

உதாரணமாக நீங்கள் வீடு வாங்கி கிரகபிரவேஷம் செய்கிறீர்கள். அப்போது உங்களிடம் வீடு வாங்கி விட்டேன் என்ற எண்ணத்தை விட அதிக மகிழ்ச்சியும், சந்தோஷமும் தான் மனதில் குடிகொண்டிருக்கும், அதற்கு முக்கிய காரணம் உணர்வுகளும், உணர்ச்சிகளும் தான்.

அதாவது நீங்கள் மகிழ்ச்சி, சந்தோஷம், நிம்மதி, ஆரோக்கியம், மதிப்பு, மரியாதை இருப்பதாக உணரும் போது, உங்களிடம் எப்போதும் நேர்மறை உணர்ச்சிகள் உருவாகும். ஆழ்மனதில் எதை பதிய வைத்திருந்தாலும் அது நிறைவேற தொடங்கும், அது தான் உணர்வின் சக்தி.

## நீங்கள் கேட்ட விஷயங்களை பெறுவதற்கான வழி:

- **உங்களுக்கு வேண்டிய இலக்கை அடைய முதலில் அதைப் பற்றிய தெளிவு உங்களுக்கு இருக்க வேண்டும்**
- **பிறகு அந்த இலக்கை நீங்கள் ஏற்கனவே உங்களிடம் இருப்பது போல் அல்லது அடைந்து விட்டது போல் மனக்காட்சிப் படுத்த வேண்டும்**

- **அதன்பின் உணர்வுபூர்வமான, முழுமை யான, விரிவான காட்சியை மனதில் பதிய வைக்கப்படும் போது அதன் சக்தி அதி கரித்து வேகமாக உங்களால் பெறமுடியும். ஒரே மாதிரியான எண்ணங்களை யோசிக் கும் போது அந்த எண்ணங்கள் தொடர்ந்து சக்தி பெற்று ஆழ்மனதில் பதிவாகி கொண்ட** பின் பிரபஞ்சம் விளைவை ஒரு வாய்ப்பாக தரு கிறது.

## *செயல்முறை:*

*குறிக்கோள்:* "**இன்னும் ஆறு மாதத்திற்குள் ஐந்து லட்சம் சம்பாதிக்க வேண்டும்**"

❖ முதலில் என்ன வேண்டும் என்பதை தெளிவாக நிர்ணயித்துக் கொள்ளுங்கள், பிறகு எழுதுங்கள்.

❖ இந்த எண்ணம் உங்கள் மன தில் எல்லா எண்ணங்களுக்கும் முதலாவதாக இருக்க வேண்டும்.

❖ பிறகு வசதியான இடத்தில் அமர்ந்து கொள்ளுங்கள். சத்தமில்லா இடமாக இருந் தால் நன்றாக இருக்கும்.

❖ கண்களை மூடிக்கொள்ளுங்கள் பொறு மையாகவும், நிதானமாகவும், ஐந்து முதல் பத்து வரை மூச்சை உள்ளிழுத்து மெதுவாக வெளி விடுங்கள்.

❖ மூச்சை உள்ளிழுக்கும் போது உச்சந்தலையி லிருந்து உள்ளங்கால் வரை உங்கள் உடலை தளர்த்துங்கள்.

- உச்சந்தலை, நெற்றி, கண்கள், கன்னங்கள், வாய், தாடை, கழுத்து, தோள்பட்டை, இரு கைகள் மற்றும் விரல்கள், மார்பு, வயிறு, இடுப்பு, தொடைகள், கால்கள் மற்றும் கால் விரல்களை
தளர்த்துங்கள்.
- பிறகு நீங்கள் நினைத்த குறிக்கோளை ("இன்னும் ஆறு மாதத்திற்குள் ஐந்து லட்சம் சம்பாதிக்க வேண்டும்") பலமுறை உங்கள் மன தில் சொல்லிங்கள் நடக்கும்.

## இயற்கையின் இயல்பு:

- இயற்கை எப்போதும் நடுநிலையானது. நீங்கள் எந்த குறிக்கோளை கேட்டாலும் தரக்கூடிய மாபெரும் சக்தி பெற்றது. உங்களின் எந்த குறிக்கோளும் சிறியது தான் அதற்கு.

- எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாமல் ஓரே மாதிரியே எப்போதும் விளங்கக்கூடியது, காந்த சக்தி நிறைந்தது.

- நீங்கள் கேட்கும் விஷயங்கள் அனைத்தையும் அதற்கு புரியும்படி கேட்க வேண்டும், ஏன் வேண்டும், எதற்கு வேண்டுமென்ற குறுக்கு கேள்வி கேட்காது. ஆனால் விளைவை தந்து விடும்.

- நாள் முழுவதும் தொடர்ந்து செயல்படக்கூடிய ஆற்றல் பெற்றது. உதாரணமாக ஒரு விதையை தோட்டத்தில் விதைத்து விட்டால் போதும்,

அதன் வளர்ச்சி நாளுக்கு நாள் அதிகரித்து கொண்டே போகும். உறங்கவே உறங்காது.

- அதே மாதிரி சூரியன் காலையில் உதிக்கிறது. மாலையில் மறைகிறது. இதில் எந்த மாற்றமும் ஏற்படாமல் தினமும் ஓரே மாதிரி செயலை செய்கிறது. இந்த விஷயத்தை பொறுத்தவரை யாராலும் இயற்கையை மாற்ற முடியாத அளவுக்கு வடிவமைக்கப்பட்ட ஒரு பிரம்மாண்ட சக்தி.

- அதனால் நீங்கள் கேட்ட அனைத்து விஷயங்களையும் உங்களால் பெற முடியும்.

## பிரபஞ்சத்தின் தாராள குணம்:

- பிரபஞ்சத்தில் உள்ள புதையல்கள் அளவிட முடியாதவை. அந்த அளவு நம் புரிதலுக்கு அப்பாற்பட்டவை.

- **நீங்கள் எதை எத்தனை முறை கேட்டாலும் தரக்கூடிய இயல்புடையது. அது வற்றாத ஒரு வளம் நிறைந்த மாபெரும் உலகம்.**

- இந்த அனைத்து வளத்தையும் எப்படி பெற வேண்டும் என்று நீங்கள் தெரிந்து கொண்டால் நீங்கள் நினைத்தாற்போல் உங்கள் குறிக்கோளை நிஜ உலகில் அடைய முடியும். அதை பெறுவதற்கான வழி இப்புத்தகத்தில் உள்ளது.

- இது வரை இவ்வுலகில் வாழ்ந்த அனைவரது திட்டவட்டமான, உணர்வுபூர்வமான இலக்கு,

ஆழ்மனத்தின் கொள்கைகள் மூலம் அவர்களுக்கு ஏற்ற விஷயங்களை தொடர்ந்து பிரபஞ்சத்திடம் பெற்றுக் கொண்டே உள்ளனர்.

- ❖ நீங்கள் கேட்கும் உங்கள் குறிக்கோள் சிறியதாக இருந்தாலும் சரி, பெரியதாக இருந்தாலும் சரி, அனைத்தும் ஒரே எண்ணமாகவும், முழுமையான நம்பிக்கையும் கொண்ட விஷயமாகவும் இருந்தால் எதை வேண்டுமானாலும் உங்கள் வாழ்வில் உங்களால் சுலபமாக பெறமுடியும்.

## காந்த சக்தி நிறைந்த உலகம்:

- ❖ நாம் வாழும் இவ்வுலகம் காந்த சக்தி நிறைந்தது. நம் ஒவ்வொரு எண்ணங்களும் காந்த சக்தி கொண்டது. நாம் யோசிக்கும் விதத்திற்கு ஏற்ப அது பல மடங்கு பெருகி பொழியும்.

- ❖ இந்த காந்த சக்தி கொண்ட நம் எண்ணம் திரும்ப திரும்ப ஒரு விஷயத்தை யோசிக்கும் போது காந்த சக்தி அதில் ஊடுருவி செல்லுகிறது.

- ❖ அதன் மூலம் நம் வாழ்க்கையும் ஈர்க்கப்படும், அதே போல நமக்கு தேவையான குறிக்கோளை இதன் மூலம் அடைய முடியும். நம் எண்ணங்களுக்கும், உணர்வுக்கும், அதிர்வுக்கும், கற்பனைக்கும் பிரம்மாண்ட அற்புதமான காந்த சக்தி இருக்கிறது. நான் பணத்தின் காந்தம் என்று கூறும் போது பணம் பெருகும்.

## பிரபஞ்ச சக்தி:

பிரபஞ்சமே ஒரு எல்லையில்லா மாபெரும் புதையல் களஞ்சியம். அது தான் அனைத்திற்கும் மூலாதாரம். நாம் புத்துணர்வுடன் இருப்பதற்கு இந்த பிரபஞ்ச சக்தி தான் காரணம். இவை உணர்வுகளின் மூலமாக மட்டுமே இயங்குகிறது.

- உங்களுக்கு தெளிவாக என்ன வேண்டும் என்பதை யோசித்து எழுதி கொள்ளுங்கள்.

- ஏன் அது வேண்டுமென்ற காரணம் வேண்டும், ஏனெனில் காரணம் இருந்தால் மட்டுமே உங்களில் அதை செயல்படுத்த முடியும்.

- எப்போது அதை அடைய போகிறீர்கள். அதற்கு பதிலாக அற்புதமான சேவையை செய்வதாகவும் முடிவெடுத்து கொள்ளுங்கள்.

- உதாரணமாக,

  (i) இன்னும் இரண்டு மாதத்தில் 1500 சதுர அடியில் சிட்டியில் ஒரு ப்லாட் வாங்க போகிறேன்.

  (ii) இன்னும் 4 மாதத்தில் அற்புதமான நிஸான் கார், ப்ரவுன் கலரில் வாங்குகிறேன் என எழுதி கொள்ளுங்கள்

  (iii) இன்னும் ஆறு மாதத்தில் 10 சவரன் நகை வாங்கப்போகிறேன் என எழுதி கொள்

ளுங்கள், செயல்படுத்துங்கள், வெற்றி பெறுவீர்கள்.

## பிரபஞ்சம்:

அனைத்து கோள்களும் நேர்கோட்டில் செயல்படுத்துவதற்கும், ஒன்றோடு ஒன்று மோதாமல் பல கோடி வருடங்கள் ஒரே மாதிரி ஒரு காலக்கோட்டில் பயணித்துக் கொண்டு இருப்பதற்கும் இந்த பிரபஞ்ச சக்தி தான் காரணம்.

நம் சூரிய குடும்பத்தை போல பல குடும்பங்களை பெற்றுள்ள ஒரு பிரம்மாண்ட அளவிட முடியாத ஒரு மாபெரும் இடம் தான் இந்த பிரபஞ்சம்.

நாம் கேட்கும் விஷயங்களுக்கேற்ப பதிலை வழங்கக் கூடிய மிக பெரும் சக்தி பெற்றது இது.

நம் உலகில் உருவாக்கப்பட்ட மற்றும் உருவாக்கப்பட்டு வரும் அனைத்து படைப்புகளும் பிரபஞ்சத்திலிருந்து பெறப்பட்ட ஒரு யோசனைகளின் படைப்பு தான் அனைத்தும்.

முன்னேற வேண்டும் என்று போராடி சென்ற மனிதர்களும், சரித்திரத்தில் இடம் பிடித்த அனைவருமே இதை பயன்படுத்தியுள்ளனர்.

இனி மேலும் முன்னேறி செல்ல வேண்டும் என்று யோசிக்கும், நினைக்கும் அனைவருக்குமே, இது எல்லா பதில்களையும் அளிக்கும். அவ்வளவு தகவல்களை தரக்கூடிய பிரபஞ்சத்திற்கு நாம் எல்லோருமே நன்றி கடன் பட்டுள்ளோம்.

அது மற்றவரிடமிருந்து பதிவும் செய்து கொள்ளும், நாம் கேட்கும் போது எப்போது வேண்டுமானாலும் தர வும் செய்யும், அது ஒரு தகவலை பதிவு செய்து கொள் ளும் விதியை போன்றது.

## உங்கள் குறிக்கோள் எப்படி இருந்தால் வேகமாக அடைய முடியும்?

உங்களின் மனதையும், மொத்த வாழ்க்கையையும் முழுமையாக சந்தோஷப்படுத்தக்கூடிய அளவில் விளங்க வேண்டும்.

உங்களை முழுமையாக ஆட்கொள்ள வேண்டும். அப்போது தான் உங்கள் எதிர்மறை சிந்தனைகள் அனைத்தும் மறைந்து உங்களால் நேர்மறையில் வாழ முடியும். அதே வழியில் உங்கள் குறிக்கோளை வேகமா கவும் அடைய முடியும்.

நீங்கள் காட்சிப்படுத்திக் கொண்டே இருக்கும் போது சக்தி உருவாக்கத்தில் பதிவாகி அது பெரும் சக்தி உரு வாக்கமாக மாறும். அப்போது ஆழ்மனதில் அவை பதி வாகி பிரபஞ்சத்திற்கு அந்த ஆசையை அனுப்பி, அந்த விளைவை பெறுவதற்கு அவ்வழிக்கு நம்மை தயார்ப டுத்தும். இது ஒரு முழுமையான இயற்கை விதி, நீங் கள் எவ்வளவு உணர்வுடனும், வேகமாகவும் இந்த பயிற் சியை செயல்படுத்துகிறீர்களோ அவ்வளவு சுலபமாக வும், வேகமாகவும் வந்து சேரும்.

## கட்டுபாட்டிலிருந்து கட்டுபாடற்ற நிலைக்கு செல்வது:

அளவு என்பது உங்கள் மனதில் பதிவு செய்யப்பட்ட ஒரு எதிர்மறையான எண்ணம். நம் சமுதாயத்தில் யார் எதை சொன்னாலும் உண்மை எதுவென்று கூட தெரி யாமல், தீர விசாரிக்காமல் அப்படியே நம்புவது தான்அ தற்கு காரணம், அதனால் எது உண்மை என்று தெரிந்து கொண்டு மனத்தில் போட்டு கொள்ளுங்கள்.

இதை சமாளிக்கும் வழி:

➢ உதாரணமாக ஒரு கம்பெனியின் பாலிசி (Rules and Regulations) பற்றி அந்த கம்பெனியில் வேலை செய்யும் ஒருவர் உங்களுக்கு மொத்த விஷயத்தை யும் எதிர்மறையாகத் தெரிவிக்கிறார் என்றால் அப் படியே நீங்கள் அதை உண்மை என்று நம்பி அந்த கம்பனி சரியில்லை அது இது என்று நாளடைவில் மற்றவரிடம் புலம்பிக்கொண்டிருப்பீர்கள். அவைய னைத்தும் ஒரு கட்டுப்பாடு (Limit) கொண்டது.

➢ ஆனால் மற்றவர் அதனை நல்ல விதமாக கூறுகி றார். முதலிலேயே நல்ல விஷயங்கள் உங்கள் மனத் தில் பதிவாகி அதுவே வேலை செய்ய ஆரம்பிக்கி றது. பிறகு நீங்கள் அது ஒரு நல்ல கம்பனி என்று சந் தோஷமாக சொல்லிக்கொண்டுருப்பீர்கள்.

➢ கட்டுபாடு கொண்ட மனம் குறைந்த அளவு சம்பளம் பெறுபவராக இருப்பது, நிறைய சம்பாதிக்க வேண்டியது தானே என்றால்? என்னால் முடியாது, திறமை இல்லை, தகுதி இல்லை என்பார்கள்.

➢ ஆனால் கட்டுபாடு இல்லாத மனம், என்னால் நிறைய சம்பளம் வாங்க முடியும் என நினைத்து செயல்படுவார்கள். அதே போல் பெறுவார்கள்.

- அதனால் தினமும் பல முறை இந்த வாக்கியத்தை உங்களிடம் கூறிக்கொள்ளுங்கள் “என்னால் முடி யாதது எதுமே இல்லை, என்னால் எதை வேண்டு மானாலும் சாதிக்கமுடியும்”.

# எப்படி விளைவை மனத்தில் பதிய வைப்பது & பெறுவது – சுயக்கட்டளை, காட்சிப்படுத்தும் முறை

---

# எதிர்மறை எண்ணத்தை களைந்து நேர்மறையை பதிய செய்வதற்கான வழி

**உங்களுடைய சக்தியை அதிகரித்து கொள்வதற் கான வழி:**

- கோவில், மஸ்ஜித், தேவாலயம் சென்றால் நிறைய பாசிட்டிவ் எனர்ஜி கிடைக்கும்.
- உங்களிடம் சூழ்ந்திருக்கும் பிரபஞ்ச சக்தி – எப்போதும் உங்களிடம் சூழ்ந்திருக்கும் பிரம்மாண்ட மான சக்தி இது, அளவிட முடியாதது.

- பணம் உங்களை பணக்காரர் ஆக்காது, மன நிலை மட்டுமே பொருள் ஈட்டும்.

- உங்களுடைய மனக்காட்சியை உங்களுக்குள் வைக்காமல் பிரபஞ்சத்திற்கு அனுப்புங்கள், வழிகளை கேளுங்கள், தரும்.

- அதிக பணம் இருந்தால் உங்களிடம் எந்த கெட்ட செயலும் நடக்காது என நினைக்க வேண்டும்.

- துல்லிய சிந்தனையுடன் உங்கள் விளைவில் கவனம் செலுத்த வேண்டும்.

- உங்களின் அதிர்வு, எண்ணம் மற்றும் விளை வின் சக்தி பிரம்மாண்டமாக வளர்த்து கொள்ள தினமும் தொடர்ந்து இடைவிடாது பயிற்சி செய்ய வேண்டும்.

## பலம் மற்றும் பலவீனமான எண்ணங்கள்:

பலமான விருப்பங்கள் மனதை தூண்டி அந்த செயலை அடைய செய்கிறது.

- உங்கள் விருப்பம் மிக வலிமையாக இருந் தால் மன இயல்புக்கும் மீறிய காரியங்களை செய்து முடிக்கும் ஆற்றல் உங்களிடம் வந்து விடும்.
- **இதற்கு காரணம் என்ன என்று யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை அடைந்தே தீர வேண்டும் என்ற உறுதி மற்றும் வலிமை நிச்சயம் வேண்டியதை தருகிறது.**

பலவீனமான எண்ணங்கள் நம் மொத்த சக்தியை யும் வீணாக்குகிறது மற்றும் நினைத்ததை அடைவதற்கு தாமதப்படுத்துகிறது. அதனால் பலவீனத்தை

- **அதிக வலிமையுடன், பலத்துடன், சக்தியுடன் எதிர்கொள்ளும் போது எதிர்ப்புகளும், தடைகளும் உருகி கரைந்தோடி** விடுகிறது.

## இப்போது வாழ ஆரம்பித்தால் நாளை வெற்றி:

உங்கள் நேரம் இப்போது மட்டும் தான் உங்களிடம் இருக்கிறது. அதாவது நேற்று என்பது ஒன்று இப்போது இல்லை, நாளை இன்னும் உருவாகவில்லை அதனால் நாளையை இப்போதே கனவு காணுங்கள். இந்த தருணத்தில் வாழ ஆரம்பியுங்கள்.

## ஆழ்மனதை பயன்படுத்தும் ரகசிய வழிமுறைகள்:

தினமும் தொடர்ந்து இரவும், பகலும் இந்த பயிற்சிகளை செய்ய வேண்டும். நீங்கள் இப்போது வாழ்ந்து கொண்டிருக்கும் வாழ்க்கை உங்களுக்கு பிடிக்கவில்லை என்றால் பரவாயில்லை, உங்கள் வாழ்க்கையில் உச்சகட்ட செல்வ செழிப்பை அடைய ஒரு சில வழிகள் உள்ளன.மனதில் பதித்தால் போதும் நடந்தே தீரும் ஒரு லட்சம் என்றாலும் சரி ஒரு கோடி என்றாலும் சரி நடக்கும்.

மனதின் ஆற்றலை தெரிந்துகொண்டும் அதை பயன்படுத்தத் தவறினால் உங்கள் வாழ்க்கை கேள்விக்குறி தான். அதை நம்பவில்லை என்றால் பிரபஞ்சம் மற்றும் இயற்கை நமக்கு கொடுத்திருக்கும் அற்புதங்களைக் கண்டு நினைத்துக்கொள்ளுங்கள் இதற்கு அளவே கிடையாது.

துல்லியமாக என்ன வேண்டும் என்று யோசித்து பதிய வையுங்கள். சரியாக பதியவில்லை என்றால் அது உங்க ளிடம் வராது. அதனால்

- ❖ உணர்வுபூர்வமான உண்மையான பிம்பத்தை உரு வாக்க வேண்டும்.
- ❖ துல்லியமான விறுவிறுப்பான காட்சியை ஏற்கனவே அடைந்துவிட்டது போல் உருவாக்க வேண்டும்.
- ❖ எப்படியேன்றால் "நான் ஒரு லட்ச ரூபாயை ஒவ்வொரு மாதமும் சம்பாதித்துக் கொண்டி ருக்கிறேன்" என 20 முறை ஒரு நாளைக்குக் கூற வேண்டும்.

உதாரனமாக நாளை காலை ஐந்து மணிக்கு எழுந்து கண்களை மூடிக்கொண்டு அந்த ஒரு லட்ச ரூபாயை ஏற்கனவே அடைந்துவிட்டது போல உணர்வு பூர்வ மாக நினைக்க நினைக்க உங்கள் குறிக்கோளின் பிம்பம் அண்டத்தில் பதிகிறது அப்படியே அதற்கான துல்லிய மான வழி உங்களுக்கு கிடைக்கிறது.

## நீங்கள் ஊக்குவிப்பு பேச்சாளர் ஆக தேவைப்படும் சில சுயக்கட்டளைகள்:

1. மற்றவர்களை வெற்றிப்பாதைக்கு கொண்டு போகக் கூடிய வழிமுறைகளை நான் சேகரித்து வைக்கிறேன்.
2. நான் குறிக்கோளுக்கும், அதன் முடிவுக்கும் தகுந்தற்போல் வழி நடத்தப்படுகிறேன்.
3. நான் பயிற்சியில் சொல்லுகின்ற அனைத்து விஷயங்களும் புதுமையாகவும், வியப்பாகவும்

பாராட்டத் தக்க வகையிலும் அவர்கள் வாழ்க் கையை மாற்றக்கூடிய வகையிலும் உள்ளது.

4. நான் பிரம்மாண்டமான தைரியத்துடனும் சொல்ல வேண்டிய வார்த்தையை துல்லியமா கவும். நகைச்சுவை உணர்வோடும் எல்லாநே ரத்தில் பேசுகிறேன்.
5. என் பேச்சைக் கேட்கும் மக்களை தொடர்ந்து வேகமாகவும், திறமையாகவும் முன்னேற்று கின்றேன்.
6. நான் மிக சிறப்பான நல்ல வழியில் உள்ளுணர் வுடனும், பாதுகாப்புடனும் என் வேலையில் ஈடுபடுகிறேன்.

## பணம் மற்றும் சந்தோஷத்தை அடையும் சுயகட்டளைகள்:

1. பிரபஞ்சத்தின் மாபெரும் சக்தியுடன் நான் ஒன்று சேர்ந்து விட்டேன்.
2. இப்போது நான் எந்த விஷயத்தை நினைத்தா லும் எனக்கு நடந்தே தீரும்.
3. இப்போது வெற்றி, சாதனைகள், செல்வ செழிப்புகள் என்னைச் சூழ்கிறது.
4. நான் கேட்ட அந்த மிக சாதாரணமான ஒரு லட்ச ரூபாய் இப்போதே எனக்கு கிடைக்கிறது.
5. நான் பிரபஞ்ச சக்தியின் நனைகின்றேன். இதன் மூலம் முழுமையான உடல் ஆரோக்கி யம், தெளிவான முடிவு எடுக்கும் திறன், அற் புதமான பேச்சுக்கலை, எப்போதும் நிலைத்தி ருக்கும் தைரியம், வேகமாக செயலை முடிக் கும் திறன், வெற்றி, செல்வ செழிப்பு, ஒரு கோடி ரூபாய் என என்னிடம் நிரம்பி வழிகிறது.

6. நான் பெருமடங்கு பொருளாதாரத்திலும், என் தொழிலிலும், ஆழ்மன நம்பிக்கையிலும், வாழ்க்கையிலும் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கிறேன்.
7. பணம் எனக்கு நிறைய நல்ல வழிகளில் நியாயமாக பிரம்மாண்டமாக கிடைக்கிறது.
8. எனக்குள் இருக்கும் மாபெரும் சக்தி என்னை பாதுகாக்கவும், கருணையாகவும், திறமையாகவும் வைத்துக்கொள்கிறது.
9. நான் சந்தோஷமாக வாழ்ந்துக் கொண்டிருக்கிறேன் (இதை மட்டும் 10 முறை சொல்லுங்கள்).

## தினமும் பயிற்சி செய்வதற்கான யுக்தி:

காலை எழுந்தவுடன் முகம் கழுவி அமைதியாக கண்களை மூடிக் கொண்டு இந்த புத்தகத்தில் கொடுத்திருக்கும் எதாவது ஒரு பயிற்சியை எடுத்து தொடர்ந்து 21 நாட்கள் செய்ய வேண்டும். அதே மாதிரி இரவும் செய்ய வேண்டும்.

- ☐ காலை 5 மணி முதல் 6 மணி வரை இந்த மணிநேரத்திற்கு இடையில் தொடர்ந்து உணர்ச்சிபூர்வமாக செய்ய வேண்டும்.
- ☐ இரவு 9 மணி முதல் 10 மணி வரை ஓய்வு நேரத்தில் 15 நிமிடம் முதல் ஒரு மணி நேரம் வரை செய்யலாம்.

அல்லது உங்கள் குறிக்கோள்களை எழுதி, நீங்கள் ஓய்வு நேரத்தில் இருக்கும்போதும் உணர்வுபூர்வமாக உங்களுக்குள் கூறிக் கொள்ளுங்கள்.

☐ நான் எப்போதும் வெற்றியோடு செயல்பட எனக்கு என் உள்ளுணர்வு துல்லியமாக அற்புதமான யோசனையை தெரிவிக்கின்றது.

☐ *“நான் அதிக சந்தோஷத்தோடும், மகிழ்ச்சியோடும் இருக்கின்றேன் ஏனென்றால் ஒவ்வொரு மாதமும் ஒரு லட்ச ரூபாயை சம்பாதித்துக் கொண்டிருக்கின்றேன்”*

## சிறப்பான வாழ்க்கையை பெறுவதற்கான சுயக்கட்டளைகள்:

- நான் அற்புதமான ஆரோக்கியத்துடன் இருக்கிறேன்.
- நான் நினைத்த பணம் எனக்கு கிடைக்கிறது. அந்த ஒரு லட்சம் அல்லது ஒரு கோடி ரூபாய்க்கு நன்றி.
- நான் அழகான, அற்புதமான, கலை நயம் கொண்ட வீட்டைக் கட்டியுள்ளேன். அது 40 லட்சம் மதிப்பாகும்.
- கடவுள் என் தொழிலுக்காக நிசான் சன்னி அல்லது பென்ஸ் ஆரஞ்சு கலரில் காரை வழங்குகிறார்.
- என் குடும்பத்துடன் அற்புதமான செல்வத்துடனும், சந்தோஷத்துடனும், செழிப்புடனும் வாழ்கிறேன்.
- நான் ஒழுக்கமாகவும், வெற்றி பழக்கத்தோடும், நிறைய நேரம் என் குடும்பத்துடனும் சிறிது நேரம் நண்பர்களுடனும் நேரம் கழிக்கிறேன்.
- நான் தொழிலில் ஒவ்வொரு நாளும் வளர்ச்சியை காண்கிறேன். நான் அமெரிக்கா, லண்டன், ஆஸ்திரேலியா, கனடா நாடுகளுக்கு குடும்பத்துடன் பாதுகாப்பாக சுற்றுலா சென்று வருகிறேன்.

- என்னுடைய தொழில், பொருளாதாரம், தனிம னித வளர்ச்சி நாளுக்கு நாள் பிரம்மாண்டமாக வளர்கின்றது.
- எனக்குள் அன்பு, அடக்கம், நிறைவு, தூய்மை, நிம்மதி, சந்தோஷம், ஆனந்தம், வசீகரம், ஆன் மீக முன்னேற்றம் பெருகுகிறது.
- நான் என் தொழிலின் மூலம் மற்றவர்களுடைய வாழ்க்கையை மாற்றிக் கொண்டிருக்கும் இந்த வேலையில் எனக்கு மனதிருப்தி ஏற்படுத்து கிறது, ஆழ்ந்த சந்தோஷம், நிம்மதி, பிரபஞ்ச சக்தி, பணம் எனக்கு நிறைகின்றது.

**குறிக்கோளை வேகமாக அடைவதற்கு சில சுயக் கட்டளைகள்:**

- இந்த சுயக்கட்டளைகளின் மூலம் அனைத்து விருப்பங்களும் எவ்வளவு வேகமாக எனக்கு கிடைக்குமோ அவ்வளவு வேகமாக எனக்கு கிடைக்கிறது.
- இது எனக்கு நூறு மடங்கு வேகமாக நடக்கிறது.
- மாபெரும் பிரபஞ்சம் என்னுடையது எனக்கு தேவையானதை தருகிறது.
- யாருமே இதுவரை தெரிந்துக் கொள்ளாத மாபெரும் வெற்றி பழக்கங்கள் எனக்கு இன் றைக்குக் கிடைக்கிறது.

இதை நீங்கள் நேரம் கிடைக்கும்போதெல்லாம் மீண் டும் மீண்டும் கூறவேண்டும்.

அதுமட்டுமின்றி இதை பற்றி நினைத்தாலும் நடந்தே தீரும், எதை நினைக்கிறீர்களோ அதை துல்லியமாக நினைப்பது இன்னும் வேகமாக நடக்கும். ஆனால் விளைவை மட்டுமே நினைத்துக் கொள்ளவேண்டும்.

## மனதினை ஆழ்ந்த நிலைக்கு கொண்டு செல்லும் பயிற்சி:

- ஒரு இடத்தில் அமைதியாக அமர்ந்துக் கொள் ளுங்கள். கண்களை மூடிக்கொண்டு ஆழமாக மூச்சை இழுத்து மெதுவாக வெளிவிடுங்கள்.
- இப்பொழுது உங்களுக்குள் ஒரு இருள் சூழ்ந்த காலியான திரைத் தெரிகின்றன. அங்கே உங்க ளுக்கு அமைதி நிலவுகிறது.
- உங்கள் கண்முன்னே உங்களுக்கு பிடித்த கட வுளும் குபேரனும் தெரிகின்றார். மிகவும் பிரகா சமான ஒளியோடு இருக்கின்றார்கள்.
- அவரிடம் சந்தனம் வாசனையும், பிரகாசமான ஒரு ஒளியையும் உங்களால் உணர முடிகின் றது.
- அதை உணரும் போது இன்னும் ஆழ்ந்த நிலைக்கு செல்கிறீர்கள்,
- அமைதி, அமைதி, அமைதி, ஆழ்ந்த அமைதி யில் இப்போது இருக்கிறீர்கள்.
- இப்போது இந்த நிலையில் சிறிது நேரத்தை இனிமையாக அனுபவியுங்கள்.
- பிறகு இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் சுயக்கட்டளைகளை பயன்ப்படுத்தி தேவையா னதை அடைந்துக் கொள்ளுங்கள்.

## பணம் பெரும் சக்திவாய்ந்த ஆழ்மன செய்முறை:

- ஓரிடத்தில் அமைதியாக அமர்ந்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டு ஆழமாக மூச்சை நன்றாக உள்ளிழுத்து வெளிவிடுங்கள்.
- இதனை 5 முறை பொறுமையாக செய்யுங்கள்.

- இப்போது உங்கள் கண்முன் தேவையில் லாத எதிர்மறையான எண்ணங்கள் சுற்று வது தோன்றுகிறது. மூச்சை நன்றாக உள்ளே இழுத்து வெளியேற்றும் போது அந்த எண்ணங் களும் வெளியேறுகிறது.
- மீண்டும் ஒருமுறை மூச்சை உள்ளிழுத்து வெளியேற்றும் போது மீதமுள்ள எதிர்மறை எண்ணங்களையும் நினைத்து வெளியேற்றி விடுங்கள்.
- இப்போது உங்களுக்குள் ஒரு அமைதி, மன தில் தூய்மையான ஓர் உணர்வு தோன்றுகிறது.
- இப்போது நீங்கள் தூய்மை அடைந்து விட் டீர்கள், இப்போது உங்கள் உச்சந்தலையில் இருந்து பிரபஞ்ச சக்தி உங்களுக்கு மழை போல் உள்ளே நிரம்புகிறது.
- நீங்கள் இப்போது உங்களுக்கு உள்ளேயும், வெளியேயும் பிரபஞ்ச சக்தியில் நனைகிறீர் கள். அந்த சக்தி மழையில் ஆரோக்கியமும், மகிழ்ச்சியும் நிரம்புகிறது. சந்தோஷமும், நிம்ம தியும், பணமும் நிரம்பி வழிகிறது.
- உங்களுக்குள் இருக்கும் உள்ளுணர்வு உங்க ளுக்கு நல்ல எண்ணங்களை விதைக்கிறது.
- உங்கள் தொழிலிலும், வேலையிலும் முன் னேற்றம் உடனடியாக ஏற்படுகிறது. உங்களிடம் பணம் நிரம்பியுள்ளது.
- நீங்கள் குறிக்கோளை அடையும்வரை உங்க ளுடைய உள்ளுணர்வு வழிகாட்டுகிறது.
- இப்போது உங்கள் வியாபாரத்தில் வளர்ச்சி ஏற் பட்டு கொண்டே உள்ளது, பணமும் அதிகரித் துக் கொண்டே உள்ளது. சந்தோஷமும், உற்சா கமும் பெருகிக்கொண்டே செல்கிறது.

- உங்களின் மூலம் நிறைய மக்களுக்கு நன்மை பெருகுகிறது.
- இந்த இயற்கையின் மாபெரும் சக்தி என்னை எப்போதும் செல்வந்தனாக நிலைத்திருக்க செய்கிறது.
- இந்த காட்சிகள் அனைத்தும் பிரபஞ்சத்தில் பயணித்து எனக்கு வேண்டிய மாற்றத்தை வெளிப்படுத்திக் கொடுக்கிறது.

## பிரபஞ்சத்தை பற்றிய இந்த கருத்தில் உங்களுக்கு ஓர் புரிதல் ஏற்படவேண்டும்:

- ❖ பிரபஞ்சம் ஒரு பிரம்மாண்ட பேரறிவு அளவிடமுடியாத, கற்பனைக்குக் எட்டாத சக்தியை உள்ளடக்கியுள்ளது.
- ❖ பிரபஞ்சம் ஒரு செல்வ உலகம், செல்வ செழிப்பின் சுரங்கம். இப்போது வரையில் நம் பூமியில் உருவாக்கப்பட்ட அனைத்து படைப்புகளும் இதிலிருந்து வெளிப்பட்டது தான்.
- ❖ அதனால் இது உங்கள் வாழ்க்கையிலும் பிரம்மாண்டமான மாற்றத்தை வெளிப்படுத்திய தீரும் என நம்புங்கள்.
- ❖ இப்போது அதனிடம் என்ன வேண்டும் என்று உங்களுக்குள் தீர்மானம் செய்துக் கொண்டு வலிமையாகவும், உறுதியாகவும் தயக்கமின்றி கேளுங்கள் கிடைக்கும்.

## அருமையான வாழ்க்கைக்கு ஏற்ற சுயக்கட்டளைகள்:

- ❖ என் வாழ்க்கையை நான் சந்தோஷமாக வாழ்கிறேன்.

- அற்புதமான ஆரோக்கியத்தில் வாழ்கிறேன்.
- அன்பு, பாசம், அதிக தன்னம்பிக்கை, அசைக்க முடியாத தைரியம், ஆளுமைத் திறன் ஆகிய அனைத்தும் என்னிடமிருந்து வெளிப்படுகிறது.
- எந்த நோக்கமாக இருந்தாலும் நான் வெற்றி பெறுகிறேன்.
- நிறைய பணம் என்னிடம் எப்போதும் இருக்கிறது.
- அனைவரிடத்திலும் அன்பையும், சந்தோஷத்தையும் வெளிப்படுத்துகிறேன்.
- நான் ஒரு சக்தி வாய்ந்த மனிதன் என்னுடைய மொத்த கவனமும் குறிக்கோளை அடைவதில் தான் இருக்கிறது.
- எனக்கு எல்லா இடங்களிலும் மதிப்பும், மரியாதையும் வழங்கப்படுகிறது.
- அனைவரும் என்னிடம் நல்ல எண்ணங்களுடன் பழகுகின்றனர். நானும் அதே மாதிரி செயல்படுகிறேன்.
- எப்போதும் வாழ்க்கையைக் கொண்டாடுகின்றேன்.
- ஆழ்மனதின் பிரம்மாண்டமான பணம் என்னுடையது.

- நான் மாபெரும் அதிர்ஷ்டத்துடன் எப்போதும் வாழ்கிறேன்.
- எனக்கு தேவையான விளைவை வேகமாக பெறுகிறேன்.

# ஆழ்மனம் வேறு, நாம் ஏற்றுக் கொள்ளும் எண்ணங்கள் வேறு

☐ உண்மையில் இப்போது நம் சமுதாயத்தில் இருக்கும் புகழடைந்தவர்கள் மற்றும் செல்வந்தர்களை எடுத்துக்கொள்ளுங்கள்.

☐ அவர்களின் மனதையும், புகழை அல்லது பணத்தை தனியாக பிரித்துப் பாருங்கள்.

☐ அந்த பணம் என்பது அனைவரிடத்திலும் இருக்கின்ற சாதாரண விஷயம்.

☐ அந்த பணத்தை செல்வந்தர்களிடமிருந்து எடுத்துக்கொண்டு சாதாரண மனிதனிடம் அதை சேர்த்துக் கொள்ளுங்கள். முக்கியமாக நான் கூறுவது மனம் என்பது ஒரு பொதுவான விஷயம். ஆனால்

புகழும், பணமும் நாம் நினைத்துக்கொண்டே இருந்தால் அது நம்மிடம் உருவாகும் நிலையாகும்.

**மனித மனம்+ எழ்மை மனநிலை = ஏழை**

**மனித மனம் + (செல்வ செழிப்பு + வளம் + தாராளம்) மனநிலை = பணக்காரன்**

- ☐ இதில் ஏழ்மையும், செல்வச் செழிப்பையும் நீங்களாகவே நினைத்து உருவாக்கப்படும் விஷயம் மட்டும்தான்.

## உண்மையில் ஆழ்மனத்திலும், பிரபஞ்சத்திலும் என்னதான் நிகழ்கிறது

- நாம் உருவாக்கும் பிம்பங்களால் மனதில் அழுத்தம் ஏற்பட்டு அது மேலே சென்று ஆசையின் அணுக்களாக ஒரு அலைபோல் பிரபஞ்சத்தில் பரவுகிறது.
- நாம் மனதில் உருவாக்கப்பட்ட துல்லியமான ஒரு உருவத்தை அங்கே உருவாக்கி அதை அப்படியே உடனடியாக நேராக நம்மிடம் அனுப்புகிறது.
- அனைத்தும் உருவாக்கப்பட்டு நமக்கு கிடைக்க குறைந்தது 3-லிருந்து 6 மாதம் வரை ஆகும், ஆனால் அதை நீங்கள் தொடர்ந்து செய்யும்போது வேகமாக நடக்கக் கூட வாய்ப்புகள் அதிகம்.
- நாம் நினைப்பதைப் பெற அனுபவ ரீதியான மனம் இதற்கு தேவைப்படுவதில்லை, இவை அனைத்தையும் அடைய ஆழ்மனமும், பிரபஞ்சப் பேராற்றலும் இருந்தால் போதுமானது.

## சில நாட்களில் உச்சகட்ட வெற்றியை அடைய வழிகள்:

- மனம் முழுவதும் 100% தன்னம்பிக்கையுடன் களமிறங்குவதும், தீராத ஆழ் விருப்பமும், யார் தடுத்தாலும் அது எனக்கு வேண்டும் என்று இருப்பது தான் அதை உடனடியாக அடைய வைக்கும்.
- அசத்தலான வெற்றி பெறுகின்ற பிம்பத்தை மனதில் பதியும் வரை உருவாக்குவது அவசியம், "இதைக் கூறும் போதே உணர்வு பூர்வமாக உணர்ந்து செயல்பட்டு பாருங்கள்"
- வெறித்தனமான துணிச்சல் நிறைந்த மன தோடு இருப்பது.
- என்னால் எதையும் அடைய முடியும் என்ற உயர்ந்த மனப்பான்மையிலிருந்து செயல்படு வது.
- மற்றவர்கள் மனநிலை அறிந்து ஆராய்ந்து பேசுவது.
- மற்றவர்கள் என்னை ஒரு திறமையான புத்தி சாலியான தலைவர் போலவும், மதிப்புமிக்கவ னாக பார்க்கின்றனர் என்று இருக்க வேண்டும்.
- தெளிவான அறிவை வளர்த்துக் கொண்டு களத்தில் இறங்கி செயல் படவேண்டும்.
- குறிக்கோளே குறியாக இருப்பது, எண்ணங் களை உங்கள் கட்டுபாட்டில் வைத்துக் கொண்டு செயல்படுத்துதல் அடுத்த நிலைக்கு செல்ல வைக்கும்.

# சக்திவாய்ந்த மனப்பிம்பத்தால் நமக்குள் என்ன நிகழ்கின்றது

ஒரு அசைக்க முடியாத தைரியம், வெற்றி பெற்றே தீருவோம் என்று முழுமையான நம்பிக்கை, அது ஏற்கனவே உங்கள் மனதில் பதிந்து விட்டது என்று அதிகாரபூர்வமான எண்ணம், இதன் மூலம் முடிவில் நம்மிடம் விளைவு உண்டாகின்றது, ஆழ்ந்த பயத்தை நம்மிடம் இருந்துப் போக்குகின்றது.

## நாம் வாழ்ந்துக் கொண்டிருக்கும் காந்தம்:

இதை பல முறை உங்களிடம் சத்தாமாக கூறிக்கொள்ளுங்கள்...

- ❖ என்னிடம் காந்த சக்தி நிறைந்துள்ளது. அதன் மூலம் வசீகரமாக இருக்கிறேன்.
- ❖ என் எண்ணங்களுக்கு காந்தச்சக்தி இருப்பது எனக்கு தெரியும்.

- ❖ பிரம்மாண்டமான வாய்ப்புகளை கவருகிறேன். அந்த வாய்ப்புகள் என்னுடையது.
- ❖ பிரம்மாண்டமான பணத்தைக் கவருகிறேன். அற்புதமான ஏராளமான பணம் என்னுடையது.
- ❖ அந்த காந்தச்சக்தி தான் என்னை சுறுசுறுப்பாக வைத்துக்கொள்கிறது. அதன் மூலம் என் அற்புதமான படைப்பை வெளிப்படுத்துகிறேன்.
- ❖ நல்ல உயரிய குணத்தை உடைய மக்களை நான் கவர்ந்திழுக்கின்றேன். இவை அனைத்தும் இப்போது எனக்கு கிடைக்கின்றது.

## ஒரே மாதத்தில் வேண்டிய பணத்தை பெறுவது எப்படி?

இது இதற்கு முன் நம் வாழ்க்கையில் நடந்து உள்ளது. இந்த பணத்திற்கு பின்னால் ஒரு அவசர தேவை இருக்க வேண்டும். அதன் மீது அதிக உடன்பாடு இருந்தால் உங்களால் அதிவேகத்தில் கிடைக்கும்.

அதன் பின் ஒரு அசைக்க முடியாத காரணம் இருக்க வேண்டும். அப்படி இருக்கும் போது நம் மனம் அந்த எண்ணத்தை நம்முள் ஆழ்ந்த நிலையில் மீண்டும் மீண்டும் ஒளிபரப்பிக் கொண்டே இருக்கும். அதாவது பெற்றே தீர வேண்டும் என்று திரும்பத் திரும்ப நமக்குள் ஒலித்துக்கொண்டிருக்கும்.

இவை நம் தேவையை உடனடியாக அடைய நமக்குள் தூண்டும். அதனால் தான் நாம் அனைவரிடமும் பணம் கேட்டு முயற்சி செய்வோம், கடைசியாக கேட்டவரிடம் பெற்று விடுவோம்.

1. செயலில் அல்லது எண்ணத்தில் வீரியம் இருக்க வேண்டும்.

2. அழுத்தமான உணர்வுபூர்வமான காரணம் இருக்க வேண்டும்.
3. பெற்றே தீர வேண்டும் இது தவிர வேறு வழியே இல்லை என நினைக்க வேண்டும்.
4. கிடைத்தே தீரும் என்ற பிரம்மாண்ட தன்னம் பிக்கையுடன் தேடுங்கள் வழி கிடைத்து விடும்.

**"நான் ஒரு லட்ச ரூபாயை அடைந்தே தீருவேன், ஒரு லட்ச ரூபாய் என்னிடம் நல்ல வழியில் வருகிறது என் றும் ஆழ்மனம் இதை அதிவேகத்தில் எனக்கு வழங் குகிறது என்றும், இப்போது எனக்கு ஒரு லட்சம் அல்லது பத்து லட்ச ரூபாய் வந்துவிட்டது என்றும், ஆழமாக நினைக்க வேண்டும்".**

## *செய்முறை:*

- ☐ ஒரு லட்ச ரூபாய் எனக்கு வந்தே தீரவேண்டும் என பிரார்த்தனை செய்ய வேண்டும்.
- ☐ வசதியாகவும், நிம்மதியாகவும், சந்தோஷமாகவும் செல்வ செழிப்புடன் இருப்பேன். உடனடியாக இந்த ரூபாயை நான் அடைந்தே தீரவேண்டும்.
- ☐ இதைத் தவிர வேறு வழியே இல்லை.
- ☐ அசைக்கமுடியாத நம்பிக்கையுடன் இருக்கிறேன் இவை அனைத்தும் இப்போதே வேண்டும்.
- ☐ பிரபஞ்சத்திடம் நான் எதைக் கேட்டாலும் கிடைக் கும் என எனக்கு தெரியும். ஒரு லட்ச ரூபாய் எனக்கு கொடு, அதை வைத்து தான் கடன் கட்டவோ அல் லது வேறு விஷயத்திற்க்கோ என்னால் உபயோகப் படுத்த முடியும்.

☐ லட்சம் கோடி பதில்கள் உன்னிடம் உள்ளது. அதனால் ஒரு லட்சம் சம்பாதிக்கும் வழியை கூறு என கேளுங்கள்.

## நிறைய பணத்தை பெறுவதற்கான ராஜதந்திரம்:

❖ என்னுடன் இருக்கும் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும், ஏழை மக்களுக்கும் செல்வ செழிப்பு பெருகட்டும்.

❖ அவர்கள் அனைவருக்கும் சந்தோஷம் பெருகட்டும்.

❖ நான் கடன் கொடுக்க வேண்டிய அனைவருக்கும் செல்வச் செழிப்பு உண்டாகட்டும்.

❖ அவர்களுடன் நானும் செல்வ செழிப்புடன் வாழ்கின்றேன்.

❖ என்னை சுற்றியுள்ள அனைவருக்கும் செல்வம் பெருகட்டும், கடவுளின் ஆசீர்வாதம் நிறையட்டும்.

❖ என்னை சுற்றி இருக்கும் மற்றும் நான் சந்திக்கும் அனைவரும் நல்ல எண்ணத்தோடும் உண்மையான பாசத்தோடும், உண்மையான அன்போடு, நல்ல உறவு முறையுடன் பழகுகின்றனர்.

## உயரிய மனிதனாக மாறுவதற்கு என்ன செய்ய வேண்டும்?

இப்போது இருக்கும் நிலையை விட அனைத்து விஷயங்களிலும் நீங்கள் சிறப்புடைய வேண்டும். மேலும் மேலும் உங்களை உயர்த்திக் கொள்ளும் பழக்கங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

## ஆழ்மனதில் பதிய வைக்கும் முறை:

❖ நீங்கள் அடைய விரும்பும் படங்களையோ காட்சியை உற்று நோக்கிக் கொள்ளுங்கள்.

❖ கண்களை மூடிக்கொண்டு மூச்சை பொறுமையாக 5 முறை உள்ளிழுத்து வெளிவிடுங்கள்.

❖ ஏற்கனவே நினைத்துக்கொண்ட படத்தை உண்மையாகவே பெரிய திரையில் மனதிற்கு இதமளிக்கும் உணர்வோடு அது உங்களிடம் இருக்கிறது என காட்சிப்படுத்துங்கள்.

❖ இந்த செயல் திட்டம் உடனடியாக உங்களுக்கு வந்து சேர்கிறது.

❖ நீங்கள் கண்ட சக்திவாய்ந்த படைப்புகள் அனைத்தும் என் வெளியுலகில் உருவாக்கப்பட்டு விட்டன என நினையுங்கள்.

❖ நான் அதிகம் கூறுவதைவிட செய்து காட்டும் அனுபவத்தை பெறுகிறேன் எனக் கூறவேண்டும்.

❖ வெளி மனதிலிருந்து நினைக்கும் நோக்கங்கள் வேகமாகவும், தெளிவாகவும் நடக்குமா என்றால் சந்தேகமே.

❖ ஆனால் ஆழ்மனதுடன் தொடர்பு வைத்துக்கொண்டால் அற்புதமான ஒரு சேவையை விரைவாக உலகம் முழுவதும் அளிக்க முடியும்.

❖ உங்களது மொத்த வாழ்க்கையும் மாறியது என நினைப்பது ஒரு விஷயமாகும்.

- உங்களின் பிரம்மாண்ட ஆற்றலை கட்டவிழ்த்து பெரும் வெற்றியைப் குவியுங்கள். அதாவது காட்சிப் படுத்துங்கள், சுயப்பிரகடனம் செய்யுங்கள்.

# அற்புதமான வீட்டை வெற்றிக்கரமாகக் காட்சிப்படுத்தும் முறை

- ❖ கண்களை மூடிக்கொண்டு அமைதியான இடத்தில் அமர்ந்து கொள்ளுங்கள்.
- ❖ உங்கள் வீட்டின் அறை இருட்டாக வைத்துக் கொண்டால் ரொம்ப நன்றாக இருக்கும்.
- ❖ மூச்சை நன்றாக ஆழமாகவும்,மெதுவாகவும் ஐந்து முறை உள்ளிழுத்து வெளிவிடுங்கள்.
- ❖ நீங்கள் பார்க்கும் மனதின் பார்வையில் கருப்பான காலியான திரை தெளிவாகத் தெரிகின்றன.
- ❖ உங்களுக்கு பிடித்த வீட்டின் படத்தை ஊற்று நோக்குங்கள், ஊற்று நோக்கிய பிறகு அந்த வீடு வெளியுலகில் இருக்கிறது, அதுவும் உங்களிடம்

தான் உள்ளது என நிச்சயமாக உறுதியுடனும், அதிக விசுவாசமாகவும் காட்சிப்படுத்த வேண்டும்.

❖ வீட்டின் வெளியிலிருந்து உள்ளே சென்று அதை சுற்றி பார்த்துவிட்டு அந்த புது வீட்டில் தான் நீங்கள் அமர்ந்து கொண்டு இருக்கிறீர்கள் என நினைத்துக்கொண்டே இருங்கள்.

❖ நீங்கள் கட்டிய வீட்டை கவனித்து, நாமும் வீட்டை கட்டி விட்டோம் என்ற இன்பத்தோடு உங்கள் குடும்பம் சந்தோஷத்தை உங்களிடம் வெளிப்படுத்துகிறார்கள்.

❖ உங்களுக்கும் அதிக மகிழ்ச்சி பொங்கி வழிகின்றது, இப்போது இந்த மனநிலையே உங்களை செல்வந்தராக செய்கின்றது.

❖ உங்கள் வீட்டிற்கு தேவையான நிறைய பொருட்கள் இருக்கின்றது.

❖ இந்த சுய பிம்பத்தை அப்படியே உங்கள் வெளியுலகில் உருவாகியது என நினைத்தபடி பிரபஞ்சத்திடம் ஒப்படைத்து விடுங்கள்.

❖ பின் சிறிது நேரம் கழித்து பொறுமையாக எழுங்கள்.

❖ இதை நீங்கள் தினமும் தொடர்ந்து செய்யும்பொழுது தான் உங்களுக்கு மாற்றம் ஏற்படும்.

❖ எப்படி உங்களை கண்ணாடியில் பார்த்து அது உண்மை என நினைக்கிறீர்களோ, அதுதான் உங்கள் உண்மையான உருவம். அதே போல சுய பிம்பத்தில் உருவாக்கப்படும் அனைத்து காட்சிகளுமே நிஜ உலகில் நடந்தே தீரும்.

## இந்த உலகமே கனவு தான் அதாவது கற்பனையால் உருவாக்கப்பட்ட மாயை நிறைந்த உலகம் என அனைவரும்

புரிந்து கொண்டால் நிச்சயம் உயர்ந்த புக ழுக்கு உங்களால் செல்ல முடியும், இது கனவு என புரிந்து கொண்டு விட்டால் என்ன நிகழும்....

- ☐ நீங்கள் எதை வேண்டுமானாலும் சாதிப்பீர்கள்.
- ☐ நீங்கள் நினைப்பதை விரைவாக செயல்படுத்து வீர்கள், உங்கள் படைகளை எல்லாம் சிறப்பாக உருவாக்குவீர்கள்.
- ☐ நீங்கள் தோற்கவே மாட்டீர்கள் என்ற எண்ணம் இருந்துக்கொண்டே இருக்கும்.
- ☐ உடனடியாக எதை வேண்டுமானாலும் வரவ ழைக்க நம்மால் முடியும்.
- ☐ நீங்கள் உருவாக்கிய அனைத்து படைப்புகளுக்கும் சரியான வருமானம் வழங்கப்படும்.
- ☐ உலக சாதனை படைப்பீர்கள்.

இவை அனைத்தும் ஒரு தனி மனிதனின் விருப்பமா கும், இதை நீங்கள் எந்த மாற்றமுமின்றி தினமும் கடை பிடித்து வந்தால் அற்புதமான மாற்றம் ஏற்படும்.

## புது நுணுக்கங்கள்:

பணம் என்ற விஷயம் மனிதர்களால் உருவாக்கப் பட்ட ஒரு காகிதம் மட்டும் தான். அதற்கு அவர்களால் கொடுக்கப்பட்டது தானே ₹500, ₹2000 நோட்டு மதிப்பு கள்.

பிரபஞ்சத்திற்கு நீங்கள் பிஎஸ்சி, பிஈ, எம்எஸ்சி, எம்பிபி எஸ், பன்னிரண்டாவது, பத்தாவது என நினைத்து இவ் வளவு படித்திருக்கிறீர்கள் இவ்வளவு சம்பளத்தை தான் தர வேண்டும் என அது ரூல்ஸ் போடுவதில்லை, எவ்வ ளவு கேட்டலும் தரும்.

மனிதனால் உருவாக்கப்பட்ட மற்றும் மனிதர்களிடத்

தில் நம்ப வைக்கப்பட்ட பொய்யான ஒரு தகவல்களை களைய வேண்டும், அப்படி செய்தால் பல காரியங்களை நிகழ்த்த முடியும்.

நீங்கள் கேட்கும் வீடும், காரும், பெயர், புகழ் அனைத்தும் பிரபஞ்சத்தோடு ஒப்பிட்டால் அவை அனைத்தும் அதற்கு கால் தூசிற்க்கு சமமாகும்.

## ஆழ்மனதோடு ஆழமான நட்பு வைத்துக் கொள்ளுங்கள்:

உங்கள் உள்ளே இருக்கும் சக்தி உங்கள் வாழ்விற்கு வழிகாட்டும், உள்ளுணர்வுடன் இணைந்த உடனேயே உருவாகும் சந்தோஷத்தை உணர முடியும், நீங்கள் நினைத்த விஷயம் உங்கள் வாழ்க்கையில் உருவாகத் துடிக்கும், திரும்பத் திரும்ப நினைத்தால் அதுவே வாழ்க்கைவில் நிகழும் பலன்.

அடைந்தே தீரவேண்டும் என்ற எண்ணம் உங்களிடம் அற்புதமான ஆற்றலுடன் விருப்பங்களை அடைய வைத்துவிடும். உங்களின் உள்ளுணர்வின் மேல் நீங்கள் வைத்திருக்கும் விசுவாசம் கடவுள் மேல் வைத்திருப்பதற்கு சமம்.

## நம்மை வழி நடத்தும் பிரபஞ்சம்:

உண்மையில் நடந்த சம்பவம்:

இரண்டு வயது குழ்ந்தை விளையாடி கொண்டிருந்தான். அங்கே தேங்காய் ஓடுகள் இருக்கிறது, அவன் அங்கும் இங்குமாக விளையாடுகிறான். ஆனால் ஒருமுறை கூட அந்த ஓடு அவன் காலில் குத்தவேயில்லை, அவனுக்கு விளையாடுவது சந்தோஷத்தை தருகிறது அப்படியே செய்கிறான். அந்த ஓடுகளை மிதித்தால் வரும் பிரச்சனைக

ளைக் கூட நினைக்காமல் வெற்றி சுவையை சுவைக் கிறான் ஆனால் கடைசியில் அவனுக்கு ஒன்றுமே ஆகவில்லை, காரணம் என்னவென்றால் பிரபஞ்சம் அவனை வழி நடத்துகிறது, அவனை மட்டுமல்ல அது நம்மையும் வழி நடத்துகிறது. அதை தெரிந்துக்கொள்ள முதலில் அந்த குரலை நாம் கவனிக்க வேண்டும்.

# நீங்கள் அதை அடைந்தே தீர வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு எதையெல்லாம் தரும்

- தடைகளை மதிப்பதில்லை.
- உங்களின் வேகத்தை அதிகரிக்கிறது.
- நிறைய விஷயங்களை தெரிந்து கொள்ள வைக்கிறது.
- வெற்றியை சொந்தக்காரர் ஆக்குகிறது.
- மற்றவர்கள் நம்மை கவனிக்கின்றனர்.
- வாய்ப்புகள் இருக்கிறது.
- மேலும் சிறப்போடு செயல்பட வைக்கின்றது.
- பெரும் வாய்ப்புகள் காத்திருக்கிறது.
- உங்களை ஒழுங்குபடுத்துகிறது.

- மற்றவர்களால் மதிக்கப்படுவீர்கள்.
- சாதனையாளராக உலா வருவீர்கள்.

பணம்:

நிறைய பேருக்கு பணம் சம்பாதிப்பது ஒரு பெரிய விஷயமாக கருதப்படுகிறது. ஏனென்றால் உங்களுக்கு அதை சம்பாதிப்பது முக்கியமான ஒரு கஷ்டமாக தெரிகின்றது.

உண்மையில் பணம் சம்பாதிப்பது சுலபமான விஷயமே, உங்களுக்கு நிறைய பணம் வேண்டுமெனில் அதை சுலபமாக கிடைப்பதுபோல் நம்ப வேண்டும்.

எப்படி நிறைய மக்கள் பெரும் பணத்தை சம்பாதிக்கின்றனர் என தெரிந்துகொள்ள வேண்டும். உங்கள் எண்ணத்தை பணத்தோடும், செல்வசெழிப்போடும் காட்சிப்படுத்த வேண்டும்.

எப்போதும் பணம் என்பது ஒரு எண்ணம் மற்றும் அதிர்வு என நினைக்கிறீர்களோ அப்போது பணம் நிறைய உங்களிடம் கவர்ந்திழுக்கப்படும்.

பணம் வந்தே தீர வேண்டும், அடைந்தே தீர வேண்டும் என்ற எண்ணம் கனமான கயிற்றால் உங்களையும், பணத்தையும் கட்டி போட்டதற்கு சமம், அது உங்களுக்கு வந்தே தீரும். ஏனெனில் பெரும் சக்தியுடன் அதை எண்ணத்தால் ஒன்று சேர்த்தது தான்.

## மன தியானம்:

மனிதனின் செயல்கள் மற்றும் எண்ணங்கள் அனைத்தும் மனதில் பதிவாகிறது தேவையான போது வெளிப்படுகிறது. அதனால் ஆழ்ந்த அமைதியின் பிம் பத்தை உருவாக்கி அமைதியாக இருங்கள், உங்க ளுக்கு எந்த இலக்கு சரியாக இருக்குமோ அதை உங் கள் உள்ளுணர்வு கூறும். இவை மனதின் அமைதி நிலையில் ஏற்படுகிறது.

## யாரிடம் ஆலோசனை கேட்கக் கூடாது:

- உங்களுக்கு நெருக்கமானவர்களும், உங்கள் குடும்பத்தினரும் இந்த விஷயங்களை செய் யக்கூடாது என்றாலும் நீங்கள் இதைச் செய் தாக வேண்டும் வெற்றிக்கான வழியை அவர் கள் பயன்படுத்தி பெரும் வெற்றி அடைந்து இருந்தால் அவர்கள் சொல்வதை நீங் கள் கேட்கலாம், அப்படியில்லை எனில் காது கொடுத்தும் கேட்காதீர்கள். ஆனால் அந்த விஷயத்தை ஏற்கனவே அடைந்தவரி டம் கேளுங்கள்.
- உண்மையில் நீங்கள் தெரிந்து வைத்துள்ள விஷயங்கள் உங்கள் வளர்ச்சிக்கு உதவ வில்லை எனில் அதை கடை பிடிக்காதீர்கள். வளர்ச்சி அடைய வேறு ஏதோ சிறப்பான வழி கள் உங்களுக்காக காத்திருக்கிறது என அதை தேடுங்கள்.

## ஆழ்மனதை அடைவது வேறு வழி:

☐ உங்களுக்கு பிடித்தமான, அமைதியான, சிறிது இருட்டான இடத்தில் அமர்ந்து கொள்ளுங்கள்.

☐ உங்களுடைய இரண்டு கண்களையும் மூடிக் கொள்ளுங்கள்.

☐ மூச்சை நன்றாக உள்ளிழுத்து வெளிவிடுங்கள்.

☐ இப்போது உங்களுடைய மனநிலையை பாருங்கள், அங்கே சுற்றிக்கொண்டிருக்கும் தேவையில்லாத எண்ணங்களை மட்டும் வெளியேற்றுங்கள்.

☐ மூச்சை உள்ளிழுத்து வெளிவிடும் போது அந்த எண்ணங்களையும் வெளியேற்றுங்கள்.

☐ இப்போது உங்கள் மனத்திரையில் தெளிவாகவும், கருமையாகவும் தென்படுகின்றது.

☐ இப்போதே கவனியுங்கள். அங்கே துடித்துக் கொண்டிருக்கும் இதயத்துடிப்பு உங்களது உங்கள் உடம்பில் மெல்லிய அதிர்வுகளை உண்டாக்குகின் றது.

☐ சிறிது நேரம் இதை கவனிக்கும்போது உங்கள் முழு உடம்பு அமைதியாகிறது.

☐ இதுதான் உண்மையான அமைதி நிலை இங்கே ஒரு பிரம்மாண்டமான ஆழ்ந்த அமைதி தெரிகின் றது.

☐ அந்த இதயத்துடிப்பும், உங்கள் உச்சந்தலையில் ஒரு மெல்லிய அதிர்வும் கொஞ்சம் கொஞ்சமாக தூண்டப்படுகின்றன. பிரபஞ்ச சக்தியை தன்னிச் சையாகவே வரவேற்கின்றது.

☐ மூச்சை நன்றாக ஆழமாக உள்ளிழுத்து வெளிவி டுங்கள்.

☐ இப்போது உங்கள் இதயத் துடிப்பும், பிரபஞ்ச சக்தியையும், ஆழ்ந்த அமைதியையும் ஒன்றாக உணர்கிறீர்கள்.

- ☐ அப்படியே சிறிது நேரம் அதில் முழ்கி கண்களை திறந்துக் கொள்ளுங்கள்.

நீங்கள் **வெற்றி இன்றே கடைசி:**

- நீங்கள் வாழ நினைக்கும் வாழ்க்கையை வாழ ஆரம்பித்து விடுங்கள். அதுவும் இன்றே! இப்போதே!! நம் சமுதாயத்தில் உள்ள அனைத்து மக்களும் செல்வ செழிப்புடன், அன்புடன், பாசத்துடன், சந்தோஷத்துடன் ஒரு முழுமையான வாழ்க்கை வாழ வேண்டும் என்று அதிகப்படியான நோக்கம் அனைவரிடத்திலும் உள்ளது.
- அந்த தீவிரமான எண்ணத்தை அதிகப்படுத்தி விஷயங்களை இன்றே செயல்ப்படுத்த துவங்குகள்.
- நீங்கள் நாளை அப்படி வாழலாம், அப்படி செய்யலாம், அப்படி இருக்கலாம் என்பதை நிறுத்திவிட்டு அற்புதமான முறையில் சிறப்பாக வாழ்வதற்கு நேரம் ஒதுக்க கற்றுக் கொள்ளுங்கள்.
- உங்களுடைய மொத்த கவனமும் ஒரே சீராக ஒரே வேலையில் இருப்பது அவசியமான விஷயம், முடிந்த அளவு இன்றே செயல்படுத்தி விடுங்கள் வேண்டுமென்றால் நாளை கொஞ்சமாக செய்து கொள்ளலாம்,
- ஆனால் இந்த நாளில் சந்தோஷமாக அனைத்து விஷயங்களிலும், உங்களுக்கு தேவையான வேலையை உருவாக்க, உற்பத்தி பண்ண இன்றே ஆரம்பித்து விடுங்கள்.

## உணர்வை தூண்டும் கேள்விகள்:

- ❖ ஏன் நாளை என்கிறீர்கள்? இன்று முடியாதா??- ஒரு வேலையை இன்றே நீங்கள் செயல்பட் டால் எப்படி இருக்கும் என்று யோசியுங்கள்.

- ❖ நமக்கு தேவையான ஏதோ ஒரு விஷயம் நடக் கவில்லை என்றால் என்ன நிகழ்கிறது நம் மன தில்??- அனைத்திற்கும் நாம் தான் பொறுப்பு என ஏற்றுக் கொள்ளப்பட்டால் வாழ்க்கை சிறப் படைந்து விடும் அவ்வளவு தான்.

- ❖ நாம் விரும்பும் ஏதோ ஒரு பொருளோ, உறவுகளளோ கிடைக்கவில்லையேன்றால் உடனடியாக நம் மனதில் ஏதோ காரணத்தைத் தேட ஆரம்பிக்கிறது யாரிடமாவது, யாரின் தலையின் மீதாவது கட்டவேண்டும் என நினைத்து யாரோ ஒருவரின் தலையில் கட்டி விடுகின்றோம்.

- ❖ “அவனால்தான் அது எனக்கு கிடைக்க வில்லை” என தேவையில்லாமல் நம்முடைய பிரச்சினைகளுக்கு மற்றவரை பழியாக்குவது, குறை கண்டுப்பிடிப்பது, குற்றம் தெரிவிப்பது சரியானதல்ல. அதனால பொறுப்பேற்றுக் கொள்ளவேண்டும்.

- ❖ இப்போது நான் எதை செய்தால் அடுத்த நிலைக்கு செல்வேன்?
- ❖ என்னால் ஏன் அதை அடைய முடிய வில்லை? , சரியான பயிற்சி இல்லையா? , காலம் தாழ்த்துகிறேனா?

- ❖ குறிக்கோளை தவிர வேறு எதையாவது யோசிக்கிறேனா? என உங்களை நீங்களே சோதித்து பாருங்கள்.

## உங்களுடைய எதிர்மறை பழக்கத்தை மாற்றுங்கள், வெற்றியை குவியங்கள்:

- ❖ முதலில் ஓர் இடத்தில் தனிமையில் அமைதியாக அமர்ந்து கொண்டு நீங்கள் எப்படி இந்த சமுதாயத் திலும், குடும்பத்திலும், தனிமனித உறவிலும் வாழப் போகிறீர்கள் என யோசியுங்கள்.
- ❖ பல வருடங்களாக செயல்படுத்தி வந்த பழக்கத்தை நினைத்து ஒரு பேப்பரில் எழுதி வைத்துக் கொள் ளுங்கள்.
  - ■ அதாவது குறிப்பிட்ட நேரத்தில் வேலையை முடிக்காமல் காலம் தாழ்த்துவது.
  - ■ சுய கட்டுப்பாடு இல்லாமல் நேரத்தை செலவழிப்பது.
  - ■ முடிவெடுத்து வாழாமல் ஏனோ தானோ என வாழ்வது.
  - ■ தன்னைத்தானே தாழ்த்திக் கொண்டு மற்றவர் உங்களை கீழ்தரமாக பேசு வதை அனுமதிப்பது.
  - ■ நாம் செய்த தவறான விஷயங்களுக்கு பொறுப்பேற்றுக் கொள்ளாமல் மற்றவ ரின் மீது பழிப்போடுவது.
  - ■ நல்லுறவை வளர்த்து சந்தோஷமாக இருக்காமல் எப்போதும் முரண்பாடு என நினைப்பது சண்டை போடுவது.
  - ■ நான் என்ற தலைக் கணத்துடன் எப் போதும் இருந்து எதையும் கற்றுக் கொள்ளாமல் செயல்படுவது.

- எப்போதும் தேவையில்லாமல் கடனைப் பற்றியும், உறவு முறிவைப் பற்றியும், நோயைப் பற்றியும் நினைத்து நினைத்து வருத்துவது.
- எப்போதும் தோல்வியில் கவனம் செலுத்திக் கொண்டேயிருப்பது ஒரு வேளை தோற்றுவிட்டால் என நினைப்பது.
- எப்போதும் சோகமாக துயரமாகவும் வாழ்வது.
- உயரிய நிர்வாகம், தொழில் விருத்தி, முன்னேற்றம், பண நிர்வாகம், நல்ல சிந்தனைகள் என எல்லாவற்றிலும் இனிமேல் கவனத்தை செலுத்தி செயல்பட ஆரம்பித்து விடுங்கள், இதை மாற்றியமைக்க சிறந்த வழிமுறைகள் இதுவே ஆகும்.

## அளவில்லாத பேராற்றலைப் பயன்படுத்தும் முறை:

உண்மையில் உங்களுக்குள் மறைந்து கிடக்கும் சக்திகளை உணர்ந்து தான் பாருங்களேன். காலம், நேரம் என்ற ஒன்று கிடையவே கிடையாது. உங்களுக்கு தேவையானதை இப்போது இங்கே உள்ளது அவ்வளவு தான், பிரபஞ்சத்தின் சக்தி மாபெரும் சக்தி நாம் கேட்டதை இப்போது நமக்கு தரவல்லது, மாபெரும் சக்திகளை அடைந்திட ஒரே வழி எண்ணங்கள் மற்றும் உணர்வுகளால் சுயக்கட்டளை செய்வது மட்டுமே.

உங்களுக்குள் கூறிக்கொள்ளுங்கள்...

- எனக்குள் இருக்கும் பிரம்மாண்டமான பேராற்றல் என்னை கோடிக்கான ரூபாய்களை சம்பாதிக்க வழி நடத்துகிறது.
- என் வார்த்தைகளுக்கு சகலமும் கீழ்ப்படுகின்றது.
- நாம் எப்போதும் நேர்மையாக பெரும் பணத்தை சம்பாதிக்கின்றேன்.
- உண்மையில் எனக்குள் இருக்கும் மாபெரும் சக்திகளை உணர முடிகின்றது. அது எனக்கு பாதுகாப்பையும், துளியும் பயமில்லாத தன்மையையும் தருகிறது.

## முடிந்த அளவு வெளி தொடர்பை மறந்து விட்டு உள்ளே சென்று பயணிக்க கற்றுக் கொண்டால் சொர்க்கம் தான் இங்கே:

- நடந்து கொண்டிருக்கும் அனைத்துமே கற்பனைதான், மாயைதான் என உணர வேண்டும் அப்போது நினைத்தது சுலபமாக நடக்கும், பிரச்சனை என்ற ஒன்று இருக்காது.
- உண்மையில் மற்றவரை நினைத்து அதிகமான எண்ணங்களையும், தேவையில்லாத எண்ணங்களையும் நம் மனதில் ஓட விடுவதை நிறுத்த வேண்டும்.
- உங்களுக்கு எது தேவை என கவனத்தை ஏற்படுத்திக் கொண்டு அதில் வளர்ச்சியும், அசைக்கமுடியாத நம்பிக்கையையும் செலுத்தியாக வேண்டும்.
- முடிந்தளவு அளவிட முடியாத பெரும் செல்வத்தினுள் முழ்கிவிடுங்கள், அப்படி செய்தால் பிரம்மாண்டமான வாழ்க்கை உங்கள் வசமாகி விடும்.

## உங்களுடைய தனித்துமான வாழ்க் கையை வாழுங்கள்:

எப்போதும் நமக்கென்று வசீகரமான, தனித்துவமான, அலாதியான, தனிப்பட்ட மாபெரும் வாழ்க்கை இருக் கின்றது, இங்கு அனைத்துமே தனித்துவம் தான்.

உலகின் முதல் மனிதன் நீங்கள் தான் என்றால் உங் களுடைய பழக்க வழக்கம், அறிவுக்கூர்மை, அருமை யான படைப்புகள், சிறந்த பண்பு நலன்கள் அனைத் தையும் எப்படி உருவாக்குவீர்கள் என யோசித்து பாருங் கள், அதைபோல் சிறப்பாக, **தனித்துவமாக** வாழுங்கள்.

## அதிர்வு, சக்தி, ஆற்றல் எல்லாம் ஒன்று (சக்தி தளத்தின் இடம்):

### நம் அனைவருக்குள்ளும் அதிர்வுகளும், எண்ணங்களும் உற்பத்தியாகும் அற்பு தமான சக்தி உள்ளது. அந்த தளத்தில் நமக்கு தேவையான ஆற்றலை நம்மால் உற்பத்தி செய்ய முடியும்.

- இதன் மூலம் அந்த ஆற்றலை நமக்கு தேவை யானது போல் மாற்றி எண்ணங்களின் மூலம் செயல்படுத்த முடியும். இந்த அதிர்வானது எப்போ தும் உற்பத்தியாவதால் அதன் உற்பத்தி நல்லதாக இருந்தால் அனைத்தும் நல்லதாக அமையும்.
- என் கணிப்பின்படி மனதளவில் எண்ணத்தின் மூலம் ஒரே விஷயத்தை உணர்வதால் எந்த உணர்வு அதிகமாக நாம் யோசிக்கிறோமோ அதுவே உற்பத்தி ஆற்றலாக மாறி பெரும் சக்தியாக வெளியேறுகிறது. அந்த சக்தி உணர்வுடனும், எண்

ணத்துடனும் ஒன்று கலந்து அதுவே விளைவாக நமக்கு அமைகிறது.

- இப்போது எது நன்மை தரும் ஆற்றல், தீங்கு விளைவிக்கும் ஆற்றல் என்பதை பார்த்து மாற்றிக் கொண்டால் அப்போது வெற்றி நிச்சயம்.
- உங்களுக்குள் சொல்லிக்கொள்ளுங்கள் “எனக்குள் இருக்கும் சக்தி தளம் எனக்கு *பிரம்மாண்டமான வளர்ச்சியைத் தருகிறது*”.

## மிகத்துல்லியமான கச்சிதமான நிலையை கொண்ட இயற்கை:

- மனிதனின் 10 மாத அணுவிலிருந்து உருவான குழந்தையின் செயல்பாடு ஒவ்வொரு வயதுக்கேற்ப சரியான வளர்ச்சியடைவதற்கு காரணம் இயற்கையின் துல்லியமான செயல்பாடே.
- இயற்கையின் மூலம் நடைபெறும் பௌர்ணமி அமாவாசை, சூரியன் வருவது போவது, சூரியனை சுற்றி வரும் பூமி 365 நாள் பயணம் மற்றும் ஒரு விதையிலிருந்து வளரும் மரம் என அனைத்தும் கச்சிதமான முறையில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.
- உதாரணமாக மேலே எறியப்பட்ட பந்து கீழே விழுவது சாத்தியம் தான். அதேபோல நீங்கள் நினைத்த எண்ணம் நிச்சயம் நிஜ உலகில் நடந்துவிடும் என்பதும் உண்மை தான்.

## பயத்திற்கே பயம் காட்டுவது எப்படி:

- பயம் தான் நம்மை எதையும் செய்யவிடாமல் தடுத்து கொண்டுள்ளது, இது நம் பல வருடங்களை வீணடித்துக் கொண்டு இருக்கிறது.

- தேவையில்லாத தடுப்பு சுவர்களை ஏற்ப டுத்தி நம்மை முன்னேற விடாமல் தடுத்துக் கொண்டு இருக்கிறது.
- ஆனால் இதை வரவிடாமல் தடுப்பதை விட சமாளிப்பது எப்படி என பார்ப்போம்.
- நிறைய நேரங்களில் நாம் நினைக்கும் பயமான எண்ணங்கள் நடந்ததே கிடையாது. அதாவது 100 சதவிதத்தில் 80 சதவிகித பயம் நடந்த தேயில்லை அவையனைத்தும் உங்கள் மனம் உருவாக்கிய எதிர்மறையான பிம்பம் என்று புரிந்துக் கொள்ளுங்கள்.

## நீங்கள் எதிர்பார்த்த முன்னேற்றம் நடக்கவில்லை, ஒரே விரக்தியாக செல்வது போல் தோன்றுகிறதா?

நிறைய மக்கள் முன்னேற வேண்டுமென்ற எண்ணத்தை மட்டுமே நினைத்துக் கொண்டிருகின்றனர். ஆனால் உண்மையில் நினைத்ததைச் செயல்படுத்த வேண்டும்!!! நினைத்ததை செயல்படுத்தாமல் இருந்தால் உங்கள் வாழ்க்கை துளிக்கூட மாறாமல் இருக்கும், அதனால் இதை மாற்ற ஒரே வழி உங்களிடம் கேள்விக் கேட்பது மட்டுமே.

- உங்களால் ஏன் முன்னேற முடியவில்லை?
- எங்கு உங்களது வாழ்க்கையில் தடை ஏற்படுகிறது?
- அந்த தடை எதனால் வருகிறது?
- உங்களிடம் முன்னேறுவதற்கான முயற்சியில்லையா?
- தேவையில்லாத விஷயங்களில் கவனம் செலுத்துகிறீர்களா?

- என் மனதை ஏன் என்னால் பார்த்துக் கொள்ள முடியாதா?

இதை சரி செய்வதற்கான நேரம் இது தான் என நினைத்து வாழ்க்கையை மீண்டும் சிறப்பாக வாழத் தொடங்குங்கள். அதன் பிறகு எப்பேற்ப்பட்ட எதிர்மறை வந்தாலும் அந்த எண்ணத்திற்கு முக்கியத்துவம் தராதீர் கள்.

# உங்களது வாழ்க்கையில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்த கச்சிதமான வழி

- உங்களின் வாழ்வில் நீங்கள் எங்கெங்கெல்லாம் அவமானங்களையும், துன்பங்களையும், தோல்வி களையும், வேதனைகளையும் அனுபவங்களையும் யோசித்துக்கொள்ளுங்கள். ஏனெனில் உங்களுக்கு நிகழ்காலத்தில் நடந்து கொண்டிருக்கும் பிரச்ச னைகளுக்கு இந்த விஷயங்கள் கூட பெருமளவில் காரணங்களாக இருக்கலாம்.

- அதனால் அந்த எதிர்மறை நிகழ்வுகளுக்கு கார ணங்கள் என்ன என்பதை யோசியுங்கள்.

➢ அந்த பிரச்சனைகளை சமாளிக்க தெரியாதது, அதற்கேற்ற பக்கம் நம்மிடமில்லாமல் இருப்பதால், எந்த கண்ணோட்டத்தில் அதை சரி செய்வது என தெரிந்து கொள்ளாமல் இருப்பதால் கூட இருக்க லாம்.

➢ மொத்தத்தில் அவன் பிரச்சனையை சமாளிக்க தெரியாத காரணத்தினால் தான் என்கின்றனர் வெற்றியாளர்கள். இது நம்மால் சில நாட்களில் மாற்றிவிட முடியும்.

➢ நீங்கள் எந்த விஷயங்களில் எல்லாம் பலவீனமாக இருக்கிறீர்கள் என ஒரு காகிதத்தை எடுத்து அதை எழுதுங்கள். உதாரணமாக

❖ சோம்பேறித்தனமாகக் காலம் தாழ்த்திக் கொண்டு இருப்பது

❖ தேவையான கல்வியை கற்றுக் கொள்ளாமல் இருப்பது

❖ நேரத்தை அதிகமாக செலவு செய்வது

❖ கவனக் குறைவாக இருப்பது

❖ பேச்சு தெளிவின்மை கோளாறு

❖ தேவையில்லாத விஷயத்தில் கவனம் செலுத்துவது

❖ சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல பேசத் தெரி யாமல் இருப்பது

- குறிக்கோளில் கவனம் செலுத்தாமல் இருப்பது

- கெட்ட பழக்கத்திற்கு அடிமையாக இருப்பது

- சிறந்த வாழ்க்கை வாழ ஆசைப்படாமல் இருப்பது

- பிரச்சினைகளை சமாளிக்க நேரம் ஒதுக்காமல் இருப்பது

- சுய ஒழுக்கம் இல்லாமல் இருப்பது

- எப்போதும் எதிர்மறையாகவே நினைப்பது

இந்த பல குறைபாடுகளை உடனடியாக சரி செய்ய அதை நேர்மறையாக யோசியுங்கள். உதாரணமாக

- கவனக் குறைவாக இருப்பது – நான் கவனமாக இருக்கிறேன்.
- சோம்பேறித்தனமாகக் காலம் தாழ்த்திக் கொண்டு இருப்பது- நான் சுறுசுறுப்பாக எல்லா வேலைகளையும் செய்து முடிக்கிறேன்.

என மேலுள்ள நேர்மறையான வாக்கியத்தை உரு வாக்கி, உங்கள் சமுதாயத்தில் பெரும் நட்சத்திரமாக ஒளி வீசுங்கள்.

## பெண்ணுக்கு வரன் கிடப்பதற்கான பயிற்சி:

ஒரு தாய் தன் மகளுக்காக வரன் கிடைக்க வேண்டும். அதனால் ஆழ்மன பயிற்சியை தயார் செய்துக் கொடுங்

கள் என்று கேட்டார், அவர்களுக்காக எழுதிய பயிற்சி தான் இது.

இதை விடியற்காலையில் எழுந்து பல முறை மனதினுள் கூறி வந்தால் அதற்கேற்ப சூழ்நிலை உருவாகும்.

- அனைத்து செல்வ வளங்களையும் கொடுத்த கடவுளுக்கு மனமார்ந்த நன்றி
- என் மகளுக்கு 100% பொருத்தமான மணம கன் கடவுள் இப்போது எனக்கு காட்டுகின்றார்.
- அந்த மணமகன் அன்புக் கொண்டவ ராக, அதிக பாசங்கொண்டவராக, பிரம்மாண்ட மகிழ்ச்சியுடையவராக இருக்கிறார்.
- என் மகளுக்கு பிடித்த மாதிரி அமைகிறார் மற்றும் என் மகளை முழுமையாக புரிந்துக் கொண்டு சந்தோஷமாக வாழ்பவராக இருக்கி றார்.
- கச்சிதமான ஆண்மகன் என் மகளுக்கு அதி விரைவாக கணவராகிறார். கடவுள் அதை வழி நடத்துகிறார்.
- கடவுளே இந்த மண வாழ்க்கையை என் மக ளுக்கு எவ்வளவு வேகமாக கொடுக்க முடி யுமோ அவ்வளவு வேகமாக தருகிறார். இந்த அற்புதமான கடவுள் எங்களை வழி நடத்துகி றார் எங்களுக்கு இப்போது அடையாளம் காட் டியிருக்கிறார். இதற்காக கோடிக்கணக்கான நன்றிகள்.
- அவர்களின் அழகான வாழ்க்கையை என் குடும்பத்தில் இருப்போரும், சொந்தக்காரர்க ளும், அக்கம் பக்கத்தினரும் மனநிறைவான சந்தோஷத்துடன் வரவேற்கின்றனர்.
- அவர்கள் ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியான வாழ்க்கையை வாழ்வதை பார்த்து எனக்கு சந் தோஷமான மனநிறைவு இருக்கின்றது.

- கடவுளின் அற்புதங்கள் அனைத்தும் என் மகள் குடும்பத்துக்கும், என் குடும்பத்துக்கும் கிடைக்கின்றது.
- எங்களை சுற்றி மகிழ்ச்சி அலை வீசுகின்றது. இவை அனைத்தையும் பார்க்கும் போது மனம் நெகிழ்ந்து போகிறது.
- கடவுளின் சந்தோஷம், மகிழ்ச்சி, வலிமை, உறுதி, உயர்ந்த அன்பு, என் மகள் மற்றும் அவள் கணவருக்கும் எப்போதும் நிறைந்து பெருகட்டும்.
- நான் எப்போதும் தெளிவான முடிவையும், நேர்மறையான பழக்கங்களையும் பெற்றிருக்கி றேன்.
- என் குடும்பம் இப்போது அதிக மகிழ்ச்சியுடை யதாக இருக்கின்றது.
- இப்போது என் மகளது முகத்தில் சந்தோஷ கலையின் ஆனந்த அலை வீசுகின்றது. அவ ளைப் பார்க்கும்போது எனக்கு சந்தோஷமாக இருக்கின்றது
- அவர்களை நினைத்து சந்தோஷமான வாழ்க் கையினை கடவுள் துல்லியமாகவும், கச்சிதமா கவும் கொடுத்தமைக்கு நன்றி.
- கடவுளின் பரிபூரண ஆசிர்வாதம் ஆனந்த மயமான மக்களின் இதயத்தில் நிரம்பி இருக் கிறது இதுதான் உண்மை, இதுதான் நிஜம் என நம்பி இருக்கும் கடவுள் அளவில் லாத சக்தியையும் பேராற்றலின் பிரம்மாண்ட மான அன்பு கொண்டவராக இருப்பதால் இவர் களை நினைத்து சந்தோஷமாக வாழ வைத் துக் கொண்டிருக்கிறார் இவை அனைத்தும் அதிவிரைவில் நடந்தேறியதற்காக அவருக்கு நன்றி.

உங்கள் வாழ்க்கையை மாற்றப்போகும் சக்தி வாய்ந்த பயிற்சி:

- உங்களை அமைதியாக வைத்துக்கொண்டு இந்த பயிற்சியை சொல்லுங்கள்.
- என்னுள் இருக்கும் கடவுளாகிய பிரம்மாண்ட ஆற்றல் எனக்கு வழங்கிக் கொண்டிருக்கும் நல்ல விஷயங்களுக்காக கோடிக்கணக்கான நன்றி.
- என் தேவைகள் அனைத்தும் உடனுக்குடன் இப்போதே கடவுளால் நிறைவேற்றப்படுகின் றது.
- பிரச்சினையான சூழல்களை போக்கக் கூடிய தைரியம் எனக்குள் நிறைந்துள்ளது. எனக்கும், என் குடும்பத்திற்கும் பல லட்ச ரூபாய் தரக் கூடிய வழியை கடவுள் என்னிடம் இப்போது வெளிப்படுத்துகிறார்.
- இந்த இயற்கை அபரிமிதமானது மிகப்பெரும் வளம் நிறைந்தது.
- இது ஒவ்வொரு மாதமும் எனக்கு ஒரு லட்ச ரூபாயை தருகின்றது இது எனக்கு மிகச் சுலப மாகவும், வேகமாகவும் கிடைக்கின்றது. இந்தப் பணத்தை பெறுவதற்கு நான் தகுதியானவன் தான்.
- முடிவில்லா பேராற்றலின் வழங்கல் அளவிட முடியாதவை எனவே நான் இவற்றிலிருந்து மிக சுலபமாக ஒரு மாதம் நான் நினைத்த ஒரு லட்ச ரூபாய் பணத்தை சம்பாதித்து வரு கிறேன். பொருளாதார ரீதியாகவும், திறமை யாலும், மேலும் மேலும் வளர்ச்சியடைந்துக் கொண்டு வருகிறேன்.
- இதுவரை எனக்கு கிடைத்துக் கொண்டிருக் கும் நல்ல சூழல்களுக்கும், நல்ல பழக்கங்க

ளுக்கும், நான் மற்றவர்களோடு உதவி செய்து தருவதற்கும் குடும்பத்தின் மீதும் நண்பர்களின் மீதும் அன்பு காட்டிய பாசம் காட்டி நேரங்களுக்கும், ஆரோக்கியமாக இருந்ததற்கும், சிறப்பாக செயல்படுவதற்கும், எனக்கு கிடைத்துள்ள அபரிமிதமான பணத்திற்கும் என் ஆத்மார்த்தமான முழுமையான நன்றிகள்.

- எனக்கு கிடைக்கும் பணத்தை பல்கிப் பெருகச் செய்கிறேன். அற்புதமான முறையில் கையாண்டு ஏராளமான பணமாக மாற்றுகிறேன்.
- ஏராளமான பணத்தை திறந்த மனதோடு என்னிடம் கவர்ந்துக் கொண்டு இருக்கிறேன்.
- என்னுடைய பணத்தின் வரைபடம் என்பது மிகப்பெரும் அபரிமிதமான பணம் குறிக்கின்றது.
- நான் எப்போதும் சரியான பாதையில் நடத்தப்படுகிறேன்.
- என் மனதிலிருந்து எழும் எண்ணங்கள் எப்போதும் நேர்மறையாக இருக்கின்றன. அப்படியே வாழ்கிறேன்.
- நான் சில நாட்களில் அல்லது சில மாதங்களில் கோடிக்கணக்கான ரூபாய் சம்பாதிக்கும் யோசனை எனக்கு துல்லியமாக கிடைக்கிறது, முடிவில்லா பேராற்றல் அதற்கேற்ப என்னை கட்டுப்படுத்தி இயக்குகிறது.
- என் வியாபாரம் தொழில் ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் மேலும் மேலும் சிறப்படைந்து போகின்றது.
- என்னுடைய ஒவ்வொரு வாடிக்கையாளரும் எனக்கு கடவுளே.

- என் பெயரில் இருக்கும் கணக்கில் ஏராள மான பணம் பெருகிக் கொண்டே செல்வதை குறித்து எனக்கு அபரிமிதமான பாராட்டுக்கள்.
- ஒவ்வொரு நாளும் தொழில் வாழ்க்கை, மக் கள் தொடர்பான அறிவும், புரிதலும் வளர்ந்துக் கொண்டே செல்கின்றது.
- கடவுள் தான் என் தொழிலின் முதலாளி நான் வளர்வதற்கும், விசாலம் ஆவதற்கு முன்னேறு வதற்கும் அற்புதமான வாய்ப்புகள் தினந்தோ றும் எனக்கு வழங்கப்படுகின்றது.
- நான் நினைத்ததை நடத்தி முடிப்பதில் கெட் டிக்காரனாக இருக்கிறேன், தைரியம், அறிவு, திறமை, கடவுளின் மீது வைத்திருக்கும் அசைக்க முடியாத நம்பிக்கை என இவை அனைத்தும் பெரும் செல்வத்தையும், வெற்றி யையும் எனக்கு தருகிறது.
- நான் உடனடியாக கோடீஸ்வரன் ஆவதற்கு முடிவில்லா பேரழிவு என்னை வழிநடத்துகி றது.
- எனக்கு நேரம் கிடைக்கும்போது நான் அதற் கான முயற்சியிலும், சிறப்பான சேவை புரிவ தற்கான யோசனைகளும் இருந்து அதன்படி நடந்து கொண்டிருக்கிறேன்.
- ஒவ்வொரு நாளும் என் வாடிக்கையாளர் களை அதிகரித்துக்கொண்டே இருக்கின்ற னர்.
- அதனால் ஒவ்வொரு நாளும் பிரம்மாண்ட பணத்தை நான் சம்பாதிக்கும் தொழில் எனக்கு கிடைத்ததற்கு நன்றி.
- அடுத்ததாக புதிய காரை இப்போது கட வுள் எனக்கு வழங்கியிருக்கிறார். அதற்கு ஆத்மார்த்தமான நன்றிகள். இவை அனைத்

தும் மிகவும் அற்புதமான அதிக மகிழ்ச்சியை எனக்கு ஏற்படுத்துகின்றது.

- நான் உடலளவிலும், மனதளவிலும் ஆரோக் கியமாக இருக்கிறேன்.
- எப்போதும் என்னைச் சூழ்ந்து நிறைய பேர் உள்ளனர் அவர்கள் என் மீது அதிக அக்க றையும், அன்பையும், பாசத்தையும் காட்டுகின் றேன்.
- அதிக செல்வாக்கு மிக்க மனிதர்கள் எனக்கு பல வகைகளில் நன்கொடைகள் வழங்குகி றார்கள். அதன் மூலம் பல சேவைகளை மக்க ளுக்கு நான் வழங்குகிறேன்.
- எப்பேர்ப்பட்ட கூட்டமாக இருந்தாலும் என் னால் தைரியமாகவும், தெளிவாகவும் அங்கே தேவைக்கேற்ப பேச முடிகின்றது.
- என்னுடைய அற்புதமான திறமைகளை நான் தெரிந்துகொண்டேன், அதை முன்னேற்றத் திற்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் பயன்ப டுத்துகிறேன்.
- என் குடும்பத்திற்காக அனைவரும் வசிக்க கூடிய வசதியான வீட்டை கடவுள் எனக்கு இப் போது வழங்கி இருக்கிறார்.
- நான் பெரும் பணக்காரன் என்பதையும், அறி வாளி என்பதையும், படைப்பாற்றல் கொண்ட வர் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன்.
- பொருளாதார ரீதியாகவும், தொழில் ரீதியாக வும் மக்கள் செல்வாக்கில் மேலும் மேலும் உயர்ந்து கொண்டே செல்கிறேன்,
- நான் ஞாபக சக்தியுடன் இருக்கிறேன்.
- என் நிஜ வாழ்க்கையில் இந்த அனைத்து அனுபவத்தையும் பெறுகின்றேன். சக்தி வாய்ந்த ஆழ்மனம் இதே செயல்படுகின்றது.

------------------------

இப்போதே முடிவு செய்யுங்கள்!!! பிரம் மாண்டமான வாழ்க்கை உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது...